# கருணையந்தாதி

(அவிநாசியில் எழுந்தருளியிருக்கும்
பெருங்கருணாம்பிகை புகழ் விளக்கும் நூல்)



*நூலாசிரியர் :*
கருணைதாசர்



*பதிப்பாசிரியர்:*
வித்துவான் வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர்



1975

இந்நூல் அவிநாசி தாலூக்கா கானுங்குளம்
திரு. வ. லிங்கசாமிக் கவுண்டர் அவர்கள்
பொருளுதவியால் பதிப்பிக்கப்பட்டது.

---

இந்நூல் பதிப்பாசிரியர் எழுமாத்தூர் வேலம்பாளையம் உயர்திருவாளர் வித்வான் வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்களிடம் இன்னும் அச்சிற் பதிப்பிக்கவிருக்கும் நூல்களில் பல உள்ளன. அதன் விவரம் இந்நூல் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. பதிப்பிக்க விரும்பும் அன்பர்கள் தொடர்பு கொள்ளவும்.

---

# கருணையந்தாதி

(அவிநாசியில் எழுந்தருளியிருக்கும்
பெருங்கருணாம்பிகை புகழ் விளக்கும் நூல்)





*நூலாசிரியர்:*
கருணைதாசர்



*பதிப்பாசிரியர்:*
வித்துவான் வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர்
வேலம்பாளையம், எழுமாத்தூர் வழி, ஈரோடு தாலூக்கா

# முகவுரை

---

செந்தமிழ் மொழியிலுள்ள சாத்திரம் தோத்திரம் புராணம் என்னும் இலக்கிய நூற்பாகுபாட்டினுள் தோத்திரம் என்பது முழுமுதற் பொருளாகிய கடவுளைத் துதித்துப் பேறு பெறுதற்குரிய சிறந்த நூற்பகுதியாம். இதனை இயற்றியவர்கள் கடவுளிடத்தில் நீரூற்றெனப் பெருகும் பேரன்புடையவர்களும் பழுத்த தமிழ்ப் புலமையுடையவர்களுமாகிய புலவர்களும் அடியார்களுமாவர்.

தோத்திர நூல்கள் என்பன தேவார திருவாசக முதலான சைவத் திருமுறைகளும் திருவாய்மொழி முதலான வைணவத் திவ்யப்பிரபந்தங்களும் தாயுமானவர் பாடல்களும் வடலூர் இராமலிங்க வடிகள் பாடிய அருட்பாவும் சோணசைலமாலை, மதுராபுரியம்பிகைமாலை, வராகிமாலை போன்ற மாலை நூல்களும் சரசுவதியந்தாதி, அபிராமியந்தாதி, திருக்கருவையந்தாதி போன்ற அந்தாதி நூல்களும் பிறவுமாம்.

தோத்திர நூல்களில் சாத்திர நூற் கருத்துகளும் புராண நூற் கருத்துகளும் மிகவும் விரவியுள்ளன. மற்றும், சொற்சுவை பொருட்சுவைகளுடன் உவகை முதலிய ஒன்பான் சுவைகளிலும் விஞ்சிய பத்திச்சுவை மலிந்து காணப்படுகின்றன. ஒன்பான்சுவைகள், — "அச்சுவை யுவகை நகையேயழுகை, வெகுளி பெருமித மச்ச மிளிவரல், மருட்கை நடுநிலையெனவொன்பதாகும்" என்பர் அணியியல் நூலார்.

(அணியியல் சுவைப்படலம் — 2)

உண்மையில் உள்ளக்கவலையை மாற்றிப் பரம் பொருளுடன் இணைத்துப் பரவசமாக்கிப் பேரின்பத்திற் செலுத்துவது பத்திச் சுவையே. "பத்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ" என்பது சேக் கிழார் பிள்ளைத் தமிழ்.

(தாலப் பருவம் — 8)

ஏனைய சுவைகளிலும் பத்திச்சுவை சிறந்ததாதல் பற்றியே நம் நாட்டில் எல்லோருடைய இல்லங்களிலும் பத்தி நூல்கள் மிகுதியும் பயிலப்படுகின்றன.

தோத்திர நூல்களில் ஒன்ருன கருணையந்தாதி என்னும் நூல் அளவிற் சிறியதாயினும் தன்னிகரில்லாத் தலைவி ஆகிய அவிநாசிப் பெருங்கருணை நாயகியைப் பாட்டுடைத் தலைவியாகக் கொண்டு பாடப்பெற்ற நூலாதலின் மிகவும் விழுமிய பெரு நூலாகக்கொள்ளும் சிறப்பினை யுடையதாம்.

"தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தெனிற்
செய்யுளிற் சிறிதும் விழுமிய தாகும்"

என்பது அணியியல் விளக்கம்.

(தலைமகற்படலம் — 4)

இந்நூல் குற்றமொன்றின்றிக் குணம் பலவுடையது. அணியொடு கூடிய சொல்லும் பொருளுமுடையது. சுருங்கக்கூறின் இந்நூல் அணியியல் விளக்கங்கூறும் செய் யுள் மாட்சியனைத்தையுமுடைய தென்னலாம். இந்நூல் காப்புச் செய்யுளுடன் நூற்றொரு பாடல்களையுடையது. பெயருங்கூட அறிய முடியாதபடி ஏட்டுவடிவில் மறைந்து இருந்த இந்நூல் சுமார் முப்பது ஆண்டுகளின் முன்பு பூந்துறை நாட்டுக்கொல்லபட்டப் புலவர் வீட்டில் கிடைக்கப் பெற்றேன். கிடைத்த இரண்டு பிரதிகளில் ஒன்றை என் அன்புக்குரியமாணவரும்பேரூர்ச் சாந்தலிங்க அடிகளாரின் திருமடத்து ஆதீனப் புலவர்களில் ஒருவரு மாகிய ஈரோடு வித்துவான் செ. இராசு என்பவரிடம் கொடுத்துப் பிரதி செய்வித்து ஒருவாறு பரிசோதனை

செய்து வைத்திருந்தேன். பின்னர் சித்தாந்தம் பத்திரிகையின் துணையிதழாசிரியராகிய திரு. புலவர் அம்பை, இரா. சங்கரனுர் அவர்கள் விரும்பியபடி சித்தாந்தத்தில் வெளியிட்டேன்.

சித்தாந்தத்தில் இந்நூலைக் கண்ணுற்ற தமிழன்பர்களில் ஒருவரும் இளமை தொட்டு என்பால் நீங்காத அன்புடைய வருமாகிய கோயமுத்தூர் பிரபல வழக்கறிஞர் திரு. R. செங்கோட்டுவேலன், B. A., B. L. அவர்கள் இந்நூல் அவிநாசித் தல சம்பந்தமான நூலாதலின் இதனைப் பரிசோதித்துக் குறிப்புரையுடன் வெளியிட வேண்டு மென்று விரும்பினுர்கள். அவர்கள் விரும்பியவாறே இந்நூலை மற்ருேர் ஏட்டுச் சுவடியுடன் ஒப்பு நோக்கிப் பரிசோதித்துக் குறிப்புரை முதலியனவும் எழுதித்தந்தேன்.

"முனிவருமன்னரு முன்னுவ பொன்னுல் முடியு மென"த் திருவாதவூரடிகள் திருக்கோவையாரில் (332) கூறியபடி இந்நூல் அச்சிடற்கு வேண்டும் பொருள் முழுவதையும் மனமுவந்தளித்த அவிஞசி தாலூக்கா அய்யம்பாளையம் கிராமம் காஞங்குளம் திரு. வ. லிங்கசாமிக் கவுண்டர் அவர்களுக்கு இம்மை மறுமைக்குரிய எல்லா விதமான நற்பேறுகளும் மேலும் மேலும் உண்டாவ தாகவெனப் பெருங்கருணைத் திருப்பிராட்டியின் திருவடித் தாமரை மலர்களைச் சிந்தையிலுஞ் சென்னியிலும் வைத்துப் போற்றுகிறேன்.

இந்நூல் அச்சாகுங்காலத்தில் உடனிருந்து பல வகையான உதவிகளைச் செய்தவர்கள் எனது பேரன்புக் குரியவர்களும் பேரூர்ச் சாந்தலிங்கர் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் திரு. ந. முத்துக்குமாரசாமி, M. A., B. L. அவர்களுக்கும், புலவர் திரு. சென்னியப்பன் அவர்களுக்கும் எனது மனம் நிறைந்த வாழ்த்துகள் யாண்டு முரியதாகட்டும். இந்நூலைக் குறித்த காலத்தில் நன்முறையில் பதிப்பித்துதவிய கோவை கூட்டுறவு அச்சகத்தாருக்கு எனது நன்றி.

இங்ஙனம்,

**வித்துவான் வே. ரா. தெய்வசிகாமணி**

## நூலாசிரியர்

பழமை வழுவாத பாண்டிய நாட்டில் திசையெலாம் புகழுஞ் செந்தமிழ் வளம்பெற்ற திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்து விளங்குவது வாசுதேவநல்லூர். அவ்வூரில் இற்றைக்கு நூறு ஆண்டுகளின் முன்பு புலவர் மரபில் தோன்றியவர் கருணைதாசர். இவரது இயற் பெயர் முத்து சாமிக் கவிராயரென்பர். இவரைக் கரும் புலவரென்று அழைப்பதுமுண்டு.

இவர் கொங்குநாட்டிற்கு வந்து அவிநாசியையடைந்து அவிநாசிலிங்கரையும் பெருங்கருணலயச் செல்வியையும் வழிபட்டுக் கைத்தொண்டும் பாடற்றொண்டும் செய்து வாழ்ந்தவர். இவர் கருணம்பிகையிடம் பேரன்புகொண்டு அடிக்கடி அம்மா அம்மாவென்றே சொல்லிக்கொண்டிருந்தனர். ஆதலால் அத்தலவாசிகள் அவரைக் கருணைதாசர் என்றே அழைத்து வந்தனர். அவிநாசியில் வாழ்ந்த சிறந்த புலவர்களையும் மெய்மையான அடியவர்களையும் எண்ணும்பொழுதெல்லாம் முதல் விரல்விட்டெண்ணத் தக்கவராயிருந்தவர் கருணைதாசர். இவர் பாடிய நூல்கள் புக்கொளிமாலை, முருகபுரிமாலை, கருணையந்தாதி, கருணம்பிகை பிள்ளைத்தமிழ், கருணம்பிகை கீர்த்தனம் முதலியன.

"தெண்டிரை சூழும் புவிதனில் சென்மம்
செனித்திடும் பேர்தனக் குறுதி
தண்டமி ழதுகொண் டுன்றனை யுணர்ந்து
சார்பதா யுனைநினைந்துருகித்
தொண்டுசெய் தகலா நண்பொடு முனையே
தொழுபவர் கதியது பெறுவார்
வண்டிரை வனஞ்சூழ் புக்கொளிப் பதியில்
வளர்பெருங் கருணைநாயகியே"

புக்கொளிமாலை — 61

"புக்கொளிமாலை நூற்றையும் படித்தோர் புண்ணியப் பரகதி சேர்வர்" என்பது புக்கொளிமாலை நூற்பயன்–1.

"மற்றுமென்ன பொய்வாழ்வை வாந்திசெய்தே
சோறெனவே
முற்றுமென்னை வைப்பாய் முருகபுரி
யாண்டோயே"
முருகபுரிமாலை — 75

புக்கொளிமாலையிலும் முருகபுரிமாலையிலும் உள்ள சொற்களும் சொற்றொடர்களும் கருத்துக்களும் கருணையந்தாதியில் மிகவும் விரவியுள்ளன.,

## கருணையந்தாதி

தொன்மையாகிய தமிழ்மொழிக்குரிய தொண்ணூற்ருறு வகைப் பிரபந்தங்களில் அந்தாதியும் ஒன்று. அது முதற் பாட்டின் அந்தம் அடுத்தபாட்டின் ஆதியாகவரத் தொடுத்துப் பாடப்படுவது. "அந்த முதலாகுதலந்தாதி" என்பது இலக்கண சூடாமணி உறுப்பியல் - 10. அந்தாதி எழுத்து, அசை, சீர், அடி என நான்கு வகைப்படும். இது வெண்பாவினுலேனும் கட்டளைக் கலித்துறையாலேனும் பாடப்பெறும்.

"வெண்பாக் கலித்துறை வேண்டிய பொருளிற்
பண்பா யுரைப்ப தந்தாதித் தொகையே"
பன்னிருபாட்டியல் — 126

வெண்பாவினுற் பாடப்பெற்ற அந்தாதி திருவருணை வெண்பா வந்தாதி முதலியன. கட்டளைக் கலித்துறையாற் பாடப்பெற்றவை மறைசையந்தாதி திருப்புகலூரந்தாதி முதலியன. "அந்தாதித்தொகை" என்பதனுல் இது நூறு செய்யுட்களாலேனும் முப்பது செய்யுட்களாலேனும் பாடப் பெறும். நூறுசெய்யுட்களாற் பாடப்பெற்றவை அபிராமி யந்தாதி முதலியன. முப்பது செய்யுட்களால் பாடப் பெற்றவை சரசுவதியந்தாதி, திருச்செந்தில் நிரோட்டகயமகவந்தாதி முதலியவை. இது அந்தாதிமாலை யெனவும் வழங்கும்.

"அந்தாதி மாலையை வேதாட வீசற்கணிந்தனனே மறைசையந்தாதிப் பாயிரச்செய்யுள் – 1. புலவருலகம் அந்தாதியைப் பிரபந்தங்களில் முதன்மையாக வைத்துப் போற்றும்."

"போற்றுமந்தாதி கலம்பகங்கோவை புனைந்துநினங்
காற்றும்பின்னும்படி லோபர்தம்பாற் செல்கவிகளும்"

சிவகிரிச்சண்முகமாலை — 17

கருணையந்தாதி—இது கருணாம்பிகையின் மேற்பாடிய அந்தாதி எனவிரியும். அந்தமுமாதியுமில்லாதவளாகிய கருணாம்பிகையின்மீது பாடி அவளது தோளினும் தாளினும் சூட்டப்பெற்றது இவ்வந்தாதிமாலை. இது கட்டளைக் கலித்துறையாற் பாடப்பெற்றது. இந்நூல், கருணாம்பிகையின் அழகு வடிவம் கருணை புகழ் கொடை (வரம்) முதலியவற்றைப் புகழ்ந்து அருளுகவெனக் கூறுதலின் இது புறத்திணையில் பாடாண்திணை வகையைச் சேர்ந்ததாகும். இது இம்மைச் செல்வமும் மறுமைச்செல்வமும் வேண்டினோர் பலரும் நாள்தோறும் விரும்பிப் படித்தற்குரிய நூல். கருணாம்பிகையின் கருணையைத் தருதற்கு இந்நூல் கற்பகவிருட்சம் போன்றது. இந்நூலில் கருணாம்பிகையின் பெருமை, துதிப்போர் பெறும் பயன்கள், மூர்த்தி தலம் தீர்த்தமென்னும் தலச் செய்திகள் முதலிய பல செய்திகள் கூறப்பட்டுள்ளன.

## அவிநாசி

மிகவும் பழமையாகிய* 1. கொங்கேழு சிவலிங்கங்களுள் ஒன்றாக விளங்குவது அவிநாசிலிங்கம். 2. தேவாரப் பாடல் பெற்ற கொங்கேழு தலங்களுள் ஒன்றாக விளங்குவது அவிநாசித்தலம். அவிநாசியென்னும் சிவலிங்கத்தின் பெயரே, புக்கொளியூர் என்னும் தலத்திற்குப் பெயராகி அவிநாசி என்று வழங்குகின்றது. இது கொடுமுடி என்னும் சிவலிங்கத்தின் பெயரே கறையூர் என்னும் தலத்திற்குப் பெயராகிக் கொடுமுடி என வழங்குதல் போன்றது.

அவிநாசிலிங்கம் சுயம்புமூர்த்தி. கன்மசாதாக்கியவடிவம், அருவுருவத்திருமேனி. திருநாவுக்கரசர் திருத்தாண்டகத்தில் ''அமலன் கண்டாய் அவிநாசி கண்டாய்'' என்றும் சுந்தரர் தமது புக்கொளியூர்ப்பதிகத்தில் ''பூத்தாழ் சடையாய் புக்கொளியூரவிநாசியே'' என்றும், மாணிக்கவாசகர் திருவாசகத்தில் ''அரிய பொருளேயவிநாசியப்பா'' என்றும் அருவுருவத் திருமேனிகொண்டு விளங்கும் அவிநாசிலிங்கத்தைப் பாடியுள்ளனர். நாசமில்லாதது அவிநாசியாம்.

அவிநாசிலிங்கர் கோவிலுக்குத் தென்புறமாய் அவரது வலதுபாகத்தில் அருளே வடிவமாய்க் கருணாம்பிகை நின்ற திருக்கோலத்தில் தனிக் கோவில் கொண்டு வீற்றிருந் தருளுகின்ருள். உருவத்திருமேனி அம்பிகை இறைவனது வலப்பாகத்தில் விளங்குவது திருமணக்கோலத்தில் என்பர்.

''வடிவுடை மங்கைதன்னேடும் மணம்படுகொள்கை யினரும்'' என்பது ஞான சம்பந்தர் பாண்டிக்கொடுமுடித் தேவாரம்—6. கருணைவடிவாகிய தேவியே, ''தேவி நினது சரணடைந்தார்க்கருளுங் கருணைத் திருவுருவி'' என்று தேவர்களால் தேவி மான்மியம் 11-வது அத்தியாயத்தில் தோத்திரம் செய்யப்பெற்றவள். மற்றும் ''வரந்தருபரையே புக்கொளிப்பதியில் வளர்பெருங் கருணைநாயகியே''— என்றும் ''வறுமைகள்போக அருள்செய்புக்கொளியில் வளர்பெருங் கருணைநாயகியே''—என்றும் புக்கொளி மாலையில் (22, 83) போற்றப்பெற்றவள்.

***அடிக் குறிப்பு:** கொங்கேழு சிவலிங்க தலங்கள்— அவிநாசி, திருமுருகன்பூண்டி, பேரூர், கொடுமுடி, கரூர், வெஞ்சமாங்கூடலூர், பவாநி.

கொங்கேழு தேவாரப் பாடல் பெற்ற தலங்கள்—கருவூர், வெஞ்சமாங்கூடலூர், கொடுமுடி, பவாநி, அவிநாசி, திருமுருகன்பூண்டி, திருச்செங்கோடு.

அவ்வம்பிகையே ஆருயிர்களெல்லாம் பிறவியாகிய கோடை வெப்பத்தில் வருந்துருதவண்ணம் தனது திருவடி நீழற் பரப்பின் கண்ணேவைத்து வாழச் செய்கின்றவள்.

கோவிலின் வெளிப்பக்கத்தில் கருணும்பிகை சிவபெருமானை மணக்கத் தவக்கோலம் பூண்டு விளங்கும் திருக்கோவில் ஒன்று பாதிரிமரத்தினடியில் உள்ளது.

காசி செல்ல விழைவுடையராயிருந்தும் காசி செல்ல முடியாதவர் பலர், "காசியில் வாசி அவிநாசியாம்" என்னும் உலக வழக்கினை மேற்கொண்டு காசியிற்போல மூர்த்திதல தீர்த்தங்களாற் சிறப்புற்று விளங்கும் அவிநாசித் தலத்தில் வாசஞ் செய்து அங்குள்ள புண்ணிய தீர்த்தத்தில் முழுகி அவிநாசிலிங்கத்தையும் பெருங்கருணைநாயகியையும் வழிபட்டு வருவர்.

"ஆசையாய் நேசத் திரவொடு பகலுன்
னடியிணைக் கன்பரா யுனையே
பூசைதான் புரியும் நேசவர் தமக்குப்
பொருந்துரு மனதுடைச் சிறியேன்
மோசனும் பிசாசன் அறிவிலாச் சிறிய
மூடனுக் கிரங்குவாய் தயவாய்
வாசியாங் காசி விசேடபுக் கொளியில்
வளர் பெருங் கருணைநாயகியே"

காசியில் நவசி வராகனைஞ் ஞாறு
கைத்தண்டுள் வைத்தது தவறி
யோசைசேர் கங்கை விழ்ந்தமிழ்ந்திடவு
முறுதுய ரவனவி நாசி
பேசிய காசிக் கிணற்றிலில் தண்டு
பிறங்கிடக் கண்டுள மகிழ்ந்தான்
வாசிய காசி விசேடபுக் கொளியில்
வளர்பெருங் கருணைநாயகியே

புக்கொளிமாலை — 53

## நூலாராய்ச்சி

இந்நூலில் ஆசிரியர் தல சம்பந்தமான விஷயங்களை யும் பிற விஷயங்களையும் ஆங்காங்குக் கூறிச்செல்கின்ருர்.

### *தலச் செய்தி*

1. விநாயகர் — அரவால் உதரம் வீக்கும் ஒருத்தல் முகத்தன். குஞ்சரம் — 53.

2. சிவபெருமான் — "கொடியாருயிர் மலைக்கோதண்டம் வாங்கிக் குடித்த சடைமுடியார்" — *6*. "வாரணவாசிப் பரம்பரர்"–*8*, "வாரணவாசிப்பிரான்"-*10*, "பற்ருர் புரங்குறு மூரலிற்காய்ந்தவன்"-*17*, "முக்கண் தற்பரர்"-*19*, "அவிநாசி தனின்முளைத்த சிவக்கொழுந்து"–*20*, "மறையுச்சிக்கெட்டாதருவும் உருவும் அகண்டமுமானவன்"–*21*, "புக்கொளியண்ணல்"–*36*, "அத்தர்"–*54*, "கொண்டால நஞ்சமுதாக்கிய கேள்வன்"–*58*, "வாரணவாசிப்பிரான்"–*68*, "விடையார்தென்புக்கொளியார்"–*70*, "புக்கொளிப் பெருமான்"–*80*, "அவிநாசிலிங்கர்"–*84*, "அரிக்குமயனுக்குமெட்டார்"–*91*, "செந்துகிர்வனம்போல் சுடருஞ் சடிலத்தவிநாசிலிங்கர்"–*96*.

3. அம்பிகை — கருணும்பிகையின் பெயர்களையும் இயல்புகளையும் திருவிளையாடல்களையும் செய்யுள்தோறும் கூறுகின்ருர். அவற்றுட் சில காட்டுதும்.

"கருணும்பிகை"–*1* "பெருங்கருணலயவல்லி"–*2*, "தென்காசி வடகயிலைவல்லி, ஆகமவேதமெல்லாஞ் சொல்லிய தேவி"–*3*, "புக்கொளிச் சுந்தரி"–*4*, "இமய மடக்கொடி," "மாருக் கருணை விளக்கு"–*5*, "கடியார் கருங்குழற் கண்மணி"–*6*, வாரணவாசிப் பரம்பரர்தன் வலத்திற் புகுந்த கருணைப்பிராட்டி"–*8*, "எம்பெருமாட்டி"–*9*, வாரணவாசிப்பிரான் உடனுடுறுங் கருணலயச் செல்வி"–*10*, "பெருங்கருணலய வாலசவுந்தரி"–*12*,

அன்பரஞ்சலி மாலையணிபவள் 13, பொன்னூபுரச் சீரடி வல்லி 14, பாலிற் சிறந்த பணிமொழி 15, முனிவர் தொழும் வற்ருக் கருணைமணி 17, தவஞ் செய்து உயர்ந்தவர்க்கும் கற்ருர்கட்கும், அமுது கருணையங்கற்பகம் 18, இடப்பாலை முக்கண்தற்பரருக்குத் திருவவிநாசித் தலத்துதவும் சிற்பரை 19, தவக்கொழுந்து, அவிநாசிதனில் முளைத்த சிவக் கொழுந்தைப் புணர்கொம்பு, கருணைத்திருமகள் 20, கருணைவடிவு 21, புவனங்கள் யாவையுமீன்ற கனங் குழை 23, உத்தமி, ஆலமீசற்கமுதாக்கிய மயில் 25, இமவான் மகிழ்ந்து கயிலேசனுக்கருள் கண்மணி, ககனத் திறைக்கும்வெயில், வேதவனக்குயில், கருணைவிளக்கு 26, புக்கொளியூர்ச் சிவசங்கரி 27, கருணைச் சவுந்தரி 28, மகிடாசுரன்புயவெற் பொடியப் பொருதிட்ட வாகைப் பொலன்கொடி 29, கருணாலயவீஸ்வரி 30, இமயாசல புத்திரி 31, புக்கொளிப்பார்ப்பதி 33, கருணாலயச் செல்வி 34, கருணாலயவோதிமம் 35, ஆனந்தசுந்தரவல்லி, தொல்லைமறைக்காதி, புக்கொளியண்ணல் வலப்பாதி 36, கொற்றவை 37, கஞ்சப்போதாந்தப் பச்சைப் பசுங்கொடி, கருணாலயநாயகி 39, பசுங்கிள்ளைவனச மலர்க்கையேற வைத்த கருணாம்பிகை 38, கருணையங்கொம்பு 42, நெடி யோன் பின்வந்தருள் மொய்குழல் 45, கருணை நிமலி 46, கருணாலயத்தற்பரை 47, சிற்பரை, சிவை, கருணாலயம் 48, கருணாலயப் பூங்கிளி 49, கருணைப் பிராட்டி, அன்பருட் கூட்டில் கிளி 50, இமவான்பயந்தகயலொன்றியகட் கரும்பு 51, தென்காசிக்கருணாலயம்படர்கொற்றவை 52, குஞ்சரத்தைப் பெற்றவள் 53, புக்கொளியம்மை 56, தவர்நெஞ்சின் ஆலயமாய்க் குடிகொண்டவள் 57, கொன்றைத் தண்டாரணி சிவசங்கரி 58, தென்புக் கொளியெம் பெருமாட்டி 60, அம்பை 61, ஆனந்த வாரணவாசிப் பெருங்கருணாலயம் 62, கருத்திற் கருணைமணி விளக்கு 63, ஆவிக்கினிய கருணைப் பிராட்டி 64, புக்கொளியூர்க் கருணையுமையவள் 66, நந்தாத ஒளி விளக்கு 67, கருணையம் பொற்கொடி 68, கருணைவிளைவு

69, தென்புக்கொளியார் வலப்பால் வளர்மின்னை வென்ற இடையார் 70, சூடகப் பங்கயச் செங்கைமின் 72, வன் தொண்டர்க் கெதிர்கொடுபோய் அன்னமிட்டாளுமணங்கு 73, வேலையுஞ் சேலையும் வென்ற விலோசன மெல்லியல் 74, கரும்புவில்லியை வென்றமின் 75, கருணைமின் 76, கருணைவிளங்கிழை 77, மறைச் சிறுபாலனைக் குளங்கொள் கராவிடைத் தந்தபொன் 78, காரணதாண்டவி, வாரண வாசியில் எண்ணுன்கறமும் வளர்த்த அன்னபூரணி 79, புக்கொளிப் பெருமான்புணர் வல்லவை 80, அம்மா, தெட்சணக்காசியம்பதியம்பிகை 81, அவிநாசிக் கிறையவள் 83, அவிநாசிலிங்கரிடத் தகலாமறைப் பொருளான கருணாலயம் 84, தென்புக்கொளிநாயகி 87, பெருங் கருணைத்தாய், உயிர்க்குத் தனித்துணை 88, திருவவிநாசி நிருமலை 89, பெருங்கருணாலய வானந்தசுந்தரி 90, அரிக் குமயனுக்கு மெட்டார்வலப்பங்கமர்ந்தவள் 91, குமரனை யீன்ற கருணாலயவல்லி 92, கருணாலயப்பெண் 93, அடுக் குலகீன்றகருணை 94, புக்கொளிவல்லி 95, அவிநாசிமுக் கணமரர் வெற்பில்படரும் பச்சைப்பசுங்கொடி 96, பிரமாதி யிந்திர கோமகுடமடிபடத்தாழுமவள் 97, கருணைமலை வல்லி 99, கருணைப் பெருந்திரு 100.

அடிக் குறிப்பு: 75,78 சிவபிரான் செயலை அம்பிகை மேலேற்றிக் கூறினர். அம்பிகையே செயல்புரிபவளாதலின், "சிவமெனும் பொருளுமாதி சத்தியொடு சேரினெத்தொழிலும் வல்லதாம், இவள் பிரிந்திடினியங்குதற்கு மரிதரிதென மறையியம்புமால்"—சௌந்தரியலகரி-1.

4. முருகன் — வேற்கைக் கடம்பணிவான்புயச் சண்முகப் பொற்குமரன் 92.

5. பிரமன் — மலர்ப்பண்ணவன் 32, நான்முகன் 15, மலர்மேல் விற்றிருக்கும் அயன் 67.

6. திருமால் — சீதரன் 15, குழலிசையால் நிரைகாத்தவன் 46, வாமனம், நெடியோன் 45.

7. .மன்மதன் — வில்லிக்கவன் 99.

8. திருஞானசம்பந்தர் — 74, 32.

9. சுந்தரர் — 73.

10. தலம் — திருவவிநாசி 19, தென்காசி 52, தெட்சணக் காசி 81, புக்கொளியூர் 27, புக்கொளி 95.

11. தீர்த்தம் — சிவகங்கை 52, குளம் 78, கங்காநதி ( நள்ளாறு ) 79.

12. தலச் செய்திகள் :
கருணும்பிகை வலப்பாகம் பெற்றது 8, 19, 36, 70.
முதலைவாய்ப் பிள்ளையழைத்தது 78.
காகத்திற்குக் கருணை செய்தது 49.
சுந்தரருக்கு எதிர்சென்று சோறளித்தது 73.

13. அம்பிகையின் திருவுருவச் சிறப்பு — கூந்தல் முதல் பாதமீருன உறுப்புகள் 24, 32, தலையணி முதல் சிலம்பீருன அணிகலன்கள் 1, 87, அம்பிகையின் திருமேனி நிறம் பச்சை, திருக்கருணலயப் பச்சைப் பசுங்கொடி 96, இந்திர நீலமிளிர் மெய் 41.
ஆயுதம் — மூவிலைச் சூலம் 22, அபயகரம், பாசம் அங்குசம் 7.
ஊர்தி — விடை ( எருது ) 6.
ஆசனம் — தாமரை மலர்.

14. அம்பிகை தேவர்கள் சூட்டும் மந்தாரமலர் மாலையைத் தோளிலும், தாளிலும் புனைந்திருப்பாள் 71, புலவர்கள் அம்பிகையின் தோளிலும், தாளிலும் கவிமாலை சூட்டுதல் மரபு 71.

அம்பிகையைத் துதித்தற்குரிய பாடல் — பண்ணீர் மைதூழ்பழம் பாடல் 71, "தொடுக்குங்கடவுட் பழம் பாடல்" மீனுட்சி பிள்ளைத் தமிழ், நான்மறைகள், வேதம் புகுந்த திருக்காதாரக்கேட்டு கருணையந்தாதி

34, பண்ணமர்பாடலினும் பாண்டிக் கொடுமுடியாரே, திருஞானசம்பந்தர் தேவாரம் - திருப்பாண்டிக் கொடுமுடி 1, அருட்பாவாகிய செந்தமிழ்ப் பாடல்களை அம்பிகையின் காதில் கேட்கும்படி நாள் தோறும் படிப்பவர்களுக்கு அம்பிகை அருள்புரிவள் 86, ஈண்டு அருட்பாவாகிய செந்தமிழ்ப் பாடல் என்றது மதுராபுரியம்பிகைமாலை அபிராமியந்தாதி மீனாட்சியம்மன் பிள்ளைத் தமிழ் போன்ற தமிழ் நூல்களும் தேவிமான்மியம் சௌந்தரியலகரி போன்ற தமிழ்மொழி பெயர்ப்பு நூல்களுமாம்.

அம்பிகையின் கால் துகள் விசேடம் 15.

15. அம்பிகையை வழிபடுவோர் பெறும் நன்மைகள் — 28, 44, 63, 93, 95. அம்பிகையை வழிபடாதோர் பெறும் தீமைகள் — 60, 84, 95,

அம்பிகையை வேண்டிச் செய்யும் முறையீடுகள் — 14, 35, 47, 49, 66, 80, 83. ஒல்லையிலுற்பவத்தேயுழலென்னால் முடிந்ததல்லவம்மா 81. அம்பிகையிடம் வேண்டும் வரங்கள் — 6, 18, 20, 27, 37, 52, 68, 74, 77, 87, 91. என்னுயிர் நின்னடி நீழலிற்பேருகவைத்தருள் 100.

அம்பிகையைச் சரண்புகுதல் — 10, 12, 51, 54, 69, 76, 82, 85. தொல்பிறவிப்புல்லிய துன்ப மொழித்தற்கு வேறு புகலில்லையே 3, சொல்லிவைத்தேன் கதியென்றைக்கும் நீயெனக்கே 11.

16. அடியார்கள் — 6, 14, 58, 83, 92, 40.

17. பிறநூலொற்றுமை —
"மனவயிரக் கல்லைக் குழைத்துக் கனியாக்கிக் கொண்ட கருணைமலை" 99.

2736



"கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனை"

திருவாசகம், திருவம்மானை 5.

"பெருங்கருணைத் தாயைப், போய்ப் பணிமின் கண்டீர் பர வீட்டின் பமெய்து தற்கே" 88.

"அவளைப் பணிமின் கண்டீரமராவதியாளுதற்கே"

அபிராமியந்தாதி 38.

"கருணாலயச் செல்வி புகழையென்றுஞ், சாற்றுங் கருத்துடையார் படையாத தனமில்லையே" 59.

"சீறடிக்கே சாருந்தவமுடையார் படையாத தன மில்லையே"

அபிராமியந்தாதி 68.

"பத்தாயிரங் கண்படைத்தானிலை மலர்ப் பண்ண வனே" 32.

"நாலாயிரங்கண் படைத்திலனேயந்த நான்முகனே"

கந்தரலங்காரம் 90.

18. நீதி— "அறியாமையிற் சிறியோர் பிழையாற்றி லறஞ் சிறந்தநெறியார் பொறுத்தருள் கூர்வதன்றோ கொள்கை" 31.

19. உலக வழக்கு — "உன் செவிக்குத் தைத்ததுமில்லை கொல்லோ" 47. "கடுகிலொரு பாகத்தை" 46.

20. இசைப்பாடல் — பண்ணீர்மை தூழ்பழம்பாடல் 33.

21. கூத்து — காரணதாண்டவி 79, திருவாலங்காட்டில் சிவபிரானுடன் காளியாய்த் திருநடம்புரிந்தவள்.

"வாரணவாசிப் பிரானுடனுடுறுங் கருணாலயச் செல்வி" 10.

22. தமிழ்ப்பாமாலை — பாடுஞ்செழுந்தமிழ்ப்பாமாலை 39.

23. தொனி — 57, இப்பாடலில் என்னுள்ளத்திலும் குடி கொள்வாய் என்னும் குறிப்புப் பொருள் தோன்ற நிற்றலின் இப்பாடல் தொனியென்னு மலங்காரமாம். இது பாட்டின்மூலம் தோன்றியதாகலின், அர்த்தமூல வியஞ்சகம் என்னும் தொனியாம். "இதனைக் குறிப்பு நடையென்பர் அணியியல் விளக்க நூலார்" நடையினைக் கொண்டினிதுணர்தலின்

அணியியல் விளக்கம், தலைமகட்பலம் 2.

24. அரியபிரயோகம் — அரவாலுதரம்வீக்கும் ஒருத்தல் முகத்தோன், காப்பு 1. திருவும், நூல் 1. அம்பிகை யின் காதணியைத் திரு என்றது பிற நூல்களிற் காண்டற் கரியது.

25. அணிகள் — இந்நூலில் பலவகையான உவமை களும் பிறவணிகளும் ஆங்காங்கே விரவி வந்துள் ளன. அவற்றுட் சில காட்டுதும். உவமை 22, 33. பருத்திப் பொதிக் கனலிட்டது 63, 66, 68, 82. "கொம்பிற்றுவிய புன்குரங்கானேன் 85. "நாயைத் திருந்து மடவார் சிற்றின்ப நசைபிடித்த பேயைப் பிடித்து மயலொழித் தாண்ட பெருங்கருணைத் தாயை" 88, என்பதனுடன் அடியில்வரும் தாயின் இயல்பு புலப்படுத்தும் புவனம்பிகை கலைஞான தீபச் செய்யுளையொப்பிட்டுக் காண்க.

"எனக்குத் தொழில் கொடுந் தீதான பாவமியற்றிடுவ
துனக்குத் தொழிலது தீர்த்தென்னையாள்வதுறுங் குழவி
தனக்குத் தொழின்மணற் சோறளைந்தாடுதல் சங்கரியே,
அனைக்குத் தொழினறு நீராட்டிப் போற்றி யருள்
செய்வதே,"

நெய்தற்கருங்கண் 89, 90, துகிர் வனம்போல் 96, வாந்தி செய்த சோறு 100.

உருவகம் — கருணை விளக்கு 5, குடும்பச் சிறை 13, ஆசைக் கொழுங்கனி 27, பிறவிக் கானம் 62, மன வயிரக்கல் 99.

எதிர்நிலையுவமை — உம்பர் மருந்திற்சிறந்த பெருங் கருணாலயவல்லி 2, கொண்டலைவென்ற குழலியர் 27, "வேலையுஞ் சேலையும் வென்ற விலோசன மெல்லி யலே" 74.

தற்குறிப்பேற்றம் 16, 98.

விற்பூட்டணி 86, 8.

நிரனிறை – சேலிற்படைப்பதுங்காப்பது நான்முகன் சீதரனே 15.

தொகைமொழி — புலன் அஞ்சகம்போக 93, வாசலையொன்பதை 35.

யாப்புச் சிறப்பு – பொருளும் அலங்காரமும் காப்பு 1. "பொருளலங்கார மெனவிருபாலும், யாப்புப் பொது வென்றறைந்தனர் புலவர்," என்பது குவலயானந்தம் 155. "பொருளுமணியுஞ் செய்யுட் பொதுவே" என்றார் அகத் தியனார். "அலங்காரத்தி னலங்காரத் தொனியங்கங் குறிப்பது யாப்புச் சிறப்பே" என்பர் குவலயானந்த நூலார். "அணியிலணிவந்தொன்றிற்றொனியாம்" என்பது அகத்தியம். விசேடண மொழி – காப்பு 1. இப் பாடலில் கருத்தனாகிய விசேடியம் விநாயகர். அவரை, "அரவாலுதரம்வீக்கும் ஒருத்தல் முகத்தன்" என விசே டணமொழியாற் கூறினார்.

பெண்பாற்புனை பொருள்துதி – நூல் 1. இப்பாடலில் அம்பிகைக்கு அழகு செய்யும் திருபிறை, சிலம்பு முதலிய அணிகலன்களையும் தனம் சரணம் என்னும் உறுப்பு களையும் கூறி அவை 'என்னுயிர் காக்க வருந் துணையோ" எனத் துதித்ததனால் இப்பாடல் பெண்பாற்புனை பொருள் துதியாம்.

எண்வகை இயற்கைப் பொருள் 59. சுடர் முதலிய எட்டும் இயற்கைப் பொருளாகவும் பிறபொருள்கள் தோன்றுதற்குரிய இடமாகவும் கூறப்பெறும்.

உ

# அவிநாசிக் கருணையந்தாதி

---

## காப்பு

தேக்குஞ் சுவைத்தன் டமிழ்க்கவி வாணர் செவிக்கமுத
மாக்கும் பொருளு மலங்கார மும்மர வாலுதரம்
வீக்கு மொருத்தன் முகத்தோனென்னுவின் மிகுமதுர
வாக்குந் தருவன் கருணையந்தாதி வழுத்துதற்கே.

தேக்கும் — நிறைந்த, சுவை — சொற்சுவை பொருட் சுவைகள், அமுதம் — இனிமை, பொருள் — அகப்பொருள் புறப் பொருள்கள், அலங்காரம்—சொல்லணி பொருளணிகள், அரவால் வீக்கும் உதரம்—பாம்பால் கட்டப்பெற்ற வயிறு, ஒருத்தல்—யானை, மதுர வாக்கு—இனிமையான சொற்கள், வழுத்துதல்—சொல்லுதல் (பாடுதல்). ஒருத்தல் முகத்தோன் கருணையந்தாதி வழுத்துதற்குப் பொருளும் அலங்காரமும் வாக்கும் தருவன் எனக் கூட்டுக. தமிழ்க் கவிதைகள் மிகவும் சுவையுடையனவாதலின் ''தேக்குஞ் சுவைத் தண்டமிழ்க் கவி'' என்றார். ''இயலுறு தமிழின் செய்யுளென்னவே யினிமையெய்தி'' தந்திவனப் புராணம் நவதீர்த்தச் சருக்கம்-1.

விநாயகர் வயிற்றில் அரவு கட்டப்பட்டிருத்தலை ''தாமரை நாயகன் அகட சக்கர வின்மணி யாவுறை விகட சக்கரன்'', என்பதாலும் பழமையான விநாயகர் திருவுருவச் சிலைகளில் வயிற்றின் முகப்பில் அரவம் செதுக்கப்பெற்றிருத்தலாலும் வியாள பூடணர் என அவருக்குப் பெயருண்மையாலும் அறிக.

## நூல்

1. திருவும் பிறையுந்திகழ்வா ணுதலுந் திலகமுஞ்சேல்
பொருவுங்குழையு மணிமேகலையும் பொற்பூணும் பெம்மான்
சருவுந்தனமுங் கருணும் பிகையிரு தண்சிலம்பு
மருவுஞ்சரணமு மென்னுயிர் காக்க வருந்துணையே.

திரு — தெய்வவுத்தி, "திருவே பொன் தெய்வவுத்தி" அரும்பொருள் விளக்க நிகண்டு 412. இது மகளிர் தலையி லணியும் அணிகலன்களில் ஒன்று. "தெய்வவுத்தியொடு வலம்புரி வயின் வைத்து" திருமுருகாற்றுப்படை, 23. தெய்வவுத்தி—சீதேவியின் வடிவாகச் செய்யப்பட்ட தலைக் கோலம் என்பர் உரையாசிரியர். சீதேவி என்னும் அணி யென்பர் அடியார்க்கு நல்லார் (சிலப்பதிகார வுரை).

பிறை—பிறைச் சந்திரன் வடிவமான காதணி. "ஒளி கொண்ட வெண்பிறைத் தோடும், பொன்னோலையும்" மதுராபுரி அம்பிகை மாலை—7.

திகழ் வாள் நுதல்—விளங்குகின்ற வாள் போன்ற நெற்றி, வாள்-ஒளியுமாம், திலகம்—பொட்டு.

சேல்—கெண்டை மீன் போன்ற கண்கள். உவமை ஆகுபெயர். எண்ணும்மை தொக்கது. பொருவும் குழையும்— தமக்குத் தாமே ஒப்பாகின்ற கண்கள் போர் செய்யும் காதுகளும். குழை—காது. "வள்ளைக் குழையுமை பங்காளர்" நால்வர் நான்மணிமாலை

மணிமேகலை — இடையிலணியும் மேகலாபரணம். எழு கோவைமணி. "மின்னு மணிமேகலைகள் மெல்லென வொலிப்ப" விவேக சிந்தாமணி "மேகலையுடுத்த வாடை விளங்கரைப் பட்டிகைப்பேர்" அரும்பொருள் விளக்கம் 37.

பொற்பூண்—பொன்னாற் செய்த பிற அணிகலன்கள்.

பெம்மான்—சிவபெருமான், சருவும்—மருவுகின்ற, சரணம்—பாதங்கள்.

கருணும்பிகையின் அணிகலன்களிற் சிலவற்றையும், உறுப்புகளிற் சிலவற்றையும் கூறிப் புகழ்வதிச்செய்யுள். கருணையந்தாதி 24 சான்று.

2. வருந்தித் துதிக்குமிராவும் பகலுமென் வாய்மலர்தூய்த்
திருந்தித் தொழுங்கையிணை செவிநாளுந் திருப்புகழிற்
பொருந்திப் பரமசுகானந்த நீர்கண் பொழியுமும்பர்
மருந்திற் சிறந்தபெருங் கருணுலய வல்லியையே.

கையிணை—இரண்டு கரங்கள், திருப்புகழ்—அம்பிகையின் அழகிய சரிதங்கள். செவி பொருந்தி—காதுகள் பொருந்துதலினல்; கேட்டலினல், கண் சுகானந்த நீர் பொழியும் என்க.

பொருந்த என்னும் செயவெனெச்சம் பொருந்தி எனச் செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சமாய்த் திரிந்து பொருந்துதலால் எனக்காரணப் பொருள் தந்து சுகானந்த நீர் பொழியும் என்னும் கண்ணின் காரியமாகிய பிறவினை கொண்டு முடிந்தது. இவ்வாறு திரிந்து பொருளுணர்த்துவதைச் ''சொற்றிரியினும் பொருள் திரியாவினைக்குறை'' என்பர் நன்னூலார், நன்னூல் 340 சூத்திரம்.

இருக்கும் என்னும் சொல் வருவித்துக் கூட்டிப் பொருத்தியிருக்கும் எனக்கூறலுமாம். இவ்வாறு வருவித்துரைத்தலை இசையெச்சமாகவேனும் அவாய் நிலையாகவேனும் கொள்க.

உம்பர் அமுது—தேவருண்ணும் அமுதம். ''வடியிட்ட தெள்ளமுதினுருவே'' மதுராபுரியம்பிகை மாலை 1.

வல்லியை வாய் துதிக்கும், கையிணை தொழும், செவி திருப்புகழிற் பொருந்தியிருக்கக் கண் சுகானந்த நீர் பொழியும் எனக் கூட்டுக.

3. வல்லியை யுந்தன மின்னைத்தென் காசி வடகயிலை
வல்லியைப் பாகங் கரந்தானை யாகம வேதமெல்லாஞ்
சொல்லிய தேவியை யல்லாம லோரேழு தொல்பிறவி
புல்லிய துன்ப மொழித்தற்கு வேறு புகலில்லையே.

வல்இயையும் தனம் மின்—சூதாடு கருவியையொத்த முலையினையுடைய பெண். ''சித்திரவன்னிக் கருங் கொங்கை'' மறைசையந்தாதி. தென்காசி—புக்கொளியூர். ''மலைமகள் வலது பாகமுறலாலினிது மருவு தெட்சண காசியாம்'' அவிநாசிலிங்கர் பதிகம் 1. பாகம்—சிவபெருமானது ஒரு பகுதியை, கரந்தானை—தன்னுள் மறைத்துள்ளவனை ''ஆதி சங்கரர் பாதியுடம்பினிதாளுமம்பிகை'' சௌந்தரியலகரி 23. சத்தியுட் சிவம் மறைந்து நிற்றலின் பாகங் கரந்தானை யெனக் கூறினாரெனலுமாம். அம்பிகை வேதாகமங்களிற் புகழ்ந்து சொல்லப்படுகின்றவள் ஆதலின் ஆகம வேதமெல் லாஞ் சொல்லிய தேவியை என்றார். அம்பிகையே வேதாக மங்களைச் சொன்னவளாகலிற் கூறினாரெனினுமாம். ''வடியிட்ட மறை பேசு பச்சிளங் கிள்ளையே'' தாயுமானவர் 940. ஓரெழுதொல்பிறவி—தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பவைகளாம். புல்லிய—தழுவிய. புகல்—சரண் புகுதற்குரிய இடம்.

4. இல்லைக் கிழத்தியை வாழ்வைச் சிறாரை யிருநிதியின்
தொல்லைத் துயரை யொழியாய் தென்புக்கொளிச்
சுந்தரிதன்
னெல்லைக்குளோடி வலஞ்சூழ்ந் துருகி யெதிர்பணிந்த
தில்லைப் பிறப்பினின் றெவ்வணம் நீகடைத் தேறுவதே.

இல்—வீடு, கிழத்தி—மனைவி, வாழ்வு—இல்வாழ்க்கை, பொருள், ஈட்டல் காத்தல் குறைத்தல் இழத்தல் முதலிய அனைத்தாலும் துன்பந் தருதலின் இரு நிதியின் தொல்லைத் துயரை என்றார். தென்—அழகு, புக்கொளி—புக்கொளியூர். சிவபிரான் அக்கினி தாண்டவம் புரிந்த காலத்தில் தேவரும் மனிதரும் அஞ்சிப் புகுந்தொளிந்த தலமாகலின் இப்பெயர்

பெற்றதென்பது தலபுராண வரலாறு. எல்லை—கோவிலின் எல்லை. எல்லை—இடமுமாம். எதிர்—முன். ஆசையை விடாய் கருணாம்பிகையை வணங்காய் எவ்வாறு பிழைப்பாய் என்று மனதை நோக்கிக் கூறியதிப்பாடல்.

5. தேறு மனமுந் தெளியா மதியுந் திருவடிக்கண்
ணூருக் கருத்து மொழியாக் கவலையு முள்ளமட்டும்
மாரு திருந்த லழகோசொல் பெற்றவ ளியலவோ
மாருக் கருணைவிளக்கே யிமய மடக்கொடியே.

தேரு—உறுதியில்லாத, ஊரு—உறுதலில்லாத, கருத்து—எண்ணம், மாருதிருத்தல்—எனக்கு நீங்காமலிருப்பது. அழகோ—உனக்கு அழகல்ல; எதிர்மறை வினா. மாருக் கருணை—வேறுபடாத அருள். மடம்—மென்மை; இளமை.

6. கொடியா ருயிர்மலைக் கோதண்டம் வாங்கிக் குடித்தசடை
முடியா ரொடுநெடு மால்விடை யேறித்தன்
மூரல்கொண்டு
கடியார் கருங்குழற் கண்மணி யேவந்து காத்தருள்வா
யடியார் குழாத்தொடு மென்னுயிர் போம்பொழு
தஞ்சலென்றே.

கொடியார்—அசுரர்கள். மலைக்கோதண்டம்—மேருமலை யாகிய வில். வாங்கி—வளைத்து. மால்விடை—பெரிய எருது, திருமாலாகிய எருது எனினுமாம். மூரல்-புன்சிரிப்பு. கடியார்—மணம் நிறைந்த. கருங்குழல்—கருமையாகிய கூந்தல். கருணாம்பிகையை மரண காலத்தில் தோன்றி மரண பயம் தீர்த்தருளுமாறு வேண்டுவதிச் செய்யுள்.

7. அஞ்சலென் றேது மபயமும் பாசமு மங்குசமுந்
தஞ்சமென் றோருக் கருள்வைத்த நாட்டமுந்
தாளிணைப்பூங்
கஞ்சமுங் கஞ்சத்தின் மேலே கிடந்த கதிர்ச்சிலம்பும்
நெஞ்சமொன் றாகி நினைவார்க் கிலைச்சென்மம் நீணிலத்தே.

அஞ்சல்—அஞ்சாதே, அபய கரம்—பயமின்மை செய்யும் வலக் கரம். பாசம்—பாசக் கயிறு. இது ஓர் படைக்கலம். அங்குசம்—தோட்டி என்னும் ஆயுதம். தஞ்சம்—அடைக்கலம். நாட்டம்—கண்கள். கஞ்சம்—தாமரை மலர். தாமரை மலர் போன்ற பாதங்கள். கதிர்—ஒளி.

'' கரும்புங் கணைவில்லும் பாசாங் குசமுங்கைக்
கொண்டடியேன்
திரும்புந் திசைதொறுந் தோற்றுகண்டாய் ''
— மதுராபுரி அம்பிகை மாலை - 3.

இதனாலும் அம்பிகை கரத்தில் பாசாங்குசமுடைமை விளங்குவதாகும்.

8. நிலத்திற் பெருந்தவஞ் செய்தன மேநெஞ்ச மேநெடுநாள்
சலத்தைச் சருகைக்கொண் டேதள்ளி நோற்குந்
தவர்கட்கெல்லாம்
பலத்தைச் சிறந்தருள் வாரண வாசிப் பரம்பரர்தன்
வலத்திற் புகுந்த கருணைப் பிராட்டியை வாழ்த்துதற்கே.

சருகு-உலர்ந்த இலை. கொண்டு-உணவாகக் கொண்டு, தள்ளி—அன்னத்தை விட்டு, நோற்கும்—தவம் செய்கின்ற, தவர்—முனிவர், பலம்—முத்தியாகிய பயன், வாரணவாசி—அவிநாசிலிங்கம். வாரணவாசியென்னும் காசி விசுவநாத லிங்கத்தின் மூல வேர் கிளைத்தோடி முளைத்த சிவலிங்கமாதலின் அவிநாசியப்பருக்கு வாரணவாசியென்று பெயராயிற்றென்பது தலபுராண வரலாறு. வாழ்த்துதல்—துதித்தல். '' வாயே வாழ்த்து கண்டாய் '' - அப்பர் தேவாரம். சிவபெருமான் தழல் தாண்டவம் புரிந்த காலத்தில் அவரது பிரிவையாற்றாத அம்பிகை அவிநாசியில் மாமரத்தடியில் தவஞ்செய்து சிவபெருமானால் வலப்பாகம் பெற்றனர் என்பது தலபுராண வரலாறாதலின் பரம்பரர் தன் வலத்திற்புகுந்த கருணைப் பிராட்டியென்றனர். நெஞ்சமே பிராட்டியை வாழ்த்துதற்குப் பெருந் தவஞ் செய்தனமெனக் கூட்டுக.

9. வாழார் தொழுது மலர்தொடுத் தெம்பெரு
மாட்டிபொற்ருள்
தாழார் மெய்யன்பரைத் தான்பணியார் வளர்
சன்னதிமுன்
சூழார் நினைப்பொழு தேனுமெய் ஞானச் சுகப்பெருக்கில்
ஆழாரென் செய்வரந் தோவருங் காலே யமபடர்க்கே.

சன்னதி—கோவில், சூழார்—கூடார், ஞானச் சுகம்—உண்மை ஞானத்தால் வரும் பேரின்பம், பெருக்கு-வெள்ளம், ஆழார்—முழுகமாட்டார், அந்தோ-ஐயோவென்னும் பொருள் தருவதோர் இரக்கக் குறிப்புச்சொல். யமபடர்—யமதூதர். அந்தோ யமபடர் வருங்காலே என் செய்வதெனக் கூட்டுக. இச்செய்யுள் உலகினரை நினைத்து இரங்கிக் கூறியது.

10. படநாகந் தாங்கு மகலிடத் தாசையிற் பட்டுழன்று
மடநா யினும்புல்ல னுயினும் வாரண வாசிப்பிரான்
உடனு டுறுங்கரு ணலயச் செல்வி யுனக்கிதுதான்
கடனுகு மெந்தனைக் கண்ணருள் பாலித்துக்
காப்பதுவே.

படநாகம்—ஆதிசேடன், அகலிடம்—பூமி, மடநாயினும் புல்லன்—அறியாமையுடைய நாயினும் அற்பமானவன். ''மடம்புகு நாய்போல் மயங்குகின்ருரே'' திருமந்திரம். ''அறிவிலாப் புன்மைக்களவு நாயினேன்'' தாயுமானவர் பாடல் 363. ஆடுறும்—ஆனந்தநிருத்தமாடுகின்ற, ''ஆட லம்பிகை'' சௌந்தரியலகரி 20. நாடுறும் எனப் பிரித்து விரும்பி வாழ்கின்ற என வுரைத்தலுமாம். கண்ணருள்—கண்களினுற் பார்த்து வழங்கும் அருளினே, பாலித்து—கொடுத்து.

11. காத்தாலுங் காப்பின்றிக் கைவிடுத் தாலுங் கடுநரகிற்
சேர்த்தாலுஞ் சொர்க்கந் திகழவைத் தாலுந்
திருக்கண்மலர்
பார்த்தாலு மன்பர் பராக்கினி லென்னைப் பராமுகமாய்
நீத்தாலுஞ் சொல்லிவைத் தேன்கதி யென்றைக்கும்
நீயெனக்கே.

இப்பாடல் அம்பிகையைச் சரண் புகுதல் கூறிற்று.

பராக்கு—விளையாட்டு, பராமுகம்—முகம் பாராதிருத்தல், அசட்டை, நீத்தாலும்—நீக்கினுலும். கதி—புதலிடம்.

‘‘ நன்றே வருகினுந் தீதே விளைகினும் நானறிவ
தொன்றேயு மில்லை யுனக்கே பரம் ’’

— அபிராமியந்தாதி-95

‘‘ காமரை முனிந்த முனிவரர் புகுமெய்க் கதியிடைப்
புகவிடுத்திடினும்
பாமர னிவனென் றிருளினுய்ப் பினுநின் பதமலரன்றி
வேறுளதோ. ’’

—சோணசைல மாலை-81.

இப்பாடலடிகள் சரணுகதி கூறுவன.

12. நீயே திருவருள் பாலிக்க வேண்டுங்கை நீக்கிவிட்டால்
நாயேற்கிங் கோர்பற்று மில்லைகண் டாய்கிரி
ராசன்பெற்ற
சேயே பரந்த புவன சராசர செந்துக்கெல்லாம்
தாயே பெருங்கரு ணாலய வால சவுந்தரியே.

கைநீக்கிவிட்டால்—கைவிட்டுவிட்டால், பற்று—பற்ருகப் பற்றும் பற்று, இல்லை—நின்னையன்றி வேறொன்றுமில்லை, நீயே பற்றுதற்குரிய பொருள் என்றபடியாம். ‘‘பற்றுக பற்றற்ருன் பற்றினை ’’ - குறள். கிரிராசன்-இமயமலையரசன், சேயே—குழவியே. புதல்வன் என்னும் பொருளில் வழங்கும் சேயென்னும் சொல் இளமை நோக்கிக் குழவி என்னும் பொருளில் வந்தது. சேய் - இளமை, புவனம் - உலகம், சராசரம்—நடையுள்ளதும், இல்லாததும், செந்து–உயிர், வாலசவுந்தரி–இளமையும் அழகும் உடையவள்.

13. தரியே னகந்தையைத் தள்ளேன் சிவாகம
சாரமொன்றும்
தெரியேன் குடும்பச் சிறைபடுவேன் கடைத்தேரச்
செய்வாய்
வரியே ரணிபுயத் தெண்டிசை யோரண்ட வானரய
னரியே யெனுமன்ப ரஞ்சலி மாலை யணிபவளே.

தரியேன்—(மனத்திலும் சிரத்திலும் நின் திருவடிகளை) அணியேன். சிவ சின்னங்களைத் தரியேன் எனினுமாம். சிவாகமசாரம்—மெய்யறிவு, ஒன்றும்—சிறிதும், குடும்பச் சிறை—குடும்பமாகிய சிறை, சிறை—காவல், கடைத்தேற—ஈடேறும்படி, செய்வாய்—நின் அருளைச் செய்வாய், வரி—வரிகளின், ஏர் அணி—மிகுந்த அழகு. ஒருபொருட் பன்மொழி உத்தமவிலக்கணமாகிய மார்பிற் கிடந்த வரிகள் மூன்றும் தோளளவும் பரந்து கிடத்தலின் வரியேரணிபுயம் என்றார். ''செம்பொறி வாங்கிய தோள்'' என்பதற்குத் திருமுருகாற்றுப் படையுரையில் நச்சினார்க்கினியர் கூறுவதும் காண்க. எண் திசையோர்—திக்குப்பாலகர் எண்மர். இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன். அண்டவாணர்—தேவர்கள், அயன்—பிரமன், அரி—திருமால், அஞ்சலி மாலை-கைகுவித்து வணங்கலின் வரிசை. அஞ்சலி யென்பது நாடக நூல் கூறும் இரட்டைக் கை வகைகளில் ஒன்று, ''கைகளிரண்டும் பதாகையாயுடன்—கூட்டமையி லஞ்சலி யென்மனார் புலவர்''. பஞ்ச மரபு—அபிநயம் - 1. இது தெய்வங்கள் குருக்கள் வேதியர் முதலியோருக்குச் செய்யும் வணக்கங்களுக்காம் என்பர். இரண்டு கையும் குடங்கையாயொன்றுவது புட்பாஞ்சலி யென்பர்.

14. அணிமுடி சூடும்பல் லாயிர கோடியண் டத்தமரர்
மணிமுடி தாழ்க்கும்பொன் னூபுரச் சீறடி வல்லிமனத்
தெணிமுடி யாத்துன் பிடர்ப்படுவேனை யெடுத்தடியார்
பணிமுடி சூட வடிமைக்கென் றேவருள் பாலிப்பதே.

மணிமுடி தாழ்க்கும்—அழகிய முடி தாழ்த்து வணங்குகின்ற, முடி—கிரீடம், நூபுரம்—சிலம்பு, சீறடி—சிறிய பாதங்கள், வல்லி—கொடிபோன்றவள்.

''மனிதருந் தேவரும் மாயா முனிவரும் வந்து சென்னிக்
குனிதருஞ் சேவடிக் கோமளமே''

— அபிராமியந்தாதி

''வேரி முண்டகன் மான் மகுடங்களின்
வீசரும் ப்ரபை தீபமுவந்தாள்''

— சௌந்தரியலகரி - 22

அண்மை விளி இயல்பாயிற்று. துன்பு இடர்—ஒருபொருட் பன்மொழி. அடியார் பணி—அடியார்களிடும் ஏவலே, அடியவர்க்குப் பணிவிடை செய்தலே, முடி சூட—சிரமேற் கொள்ளும்படி, அடியவர்களுக்குப் பணிவிடை செய்தால் துன்பங்கள் தாமே அகலுமாதலின், அடியார்க்குப் பணி செய்தலேயருள வேண்டினர்.

**15.** பாலிற் சிறந்த பனிமொழி யேநின்பொற் பாடகப்பூங்
காலிற் சிறுதுகள் மாமுடி மேற்பட்ட காரணத்தால்
ஆலிற் சிறந்த பணுடவிப் பார்முத லண்டமெல்லாஞ்
சேலிற் படைப்பதும் காப்பதும் நான்முகன் சீதரனே.

இது கருணம்பிகையின் திருவடிப் பெருமை கூறியது.

பணிமொழி—பி. ம். இப்பாடத்திற்குக் கட்டளேயிடுகின்ற சொல்லேயுடையவள், பாலிற் சிறந்த—பாலினும் சிறந்த, என்பது பொருளாம். பனி மொழி—குளிர்ச்சியாகிய சொல்லே யுடையவள், அன்மொழித்தொகைக் காரணப் பெயர். "பாலினுஞ் சொல்லினியாய்" ; அபிராமியந்தாதி. பாடகம்—சிலம்பு, பூங்கால்—அழகிய கால். "பூப்பெயர் முன்னின மெய்மையுந் தோன்றும்" என்பது நன்னூல் விதியாகவின் ஙகரம் தோன்றிற்று. சிறுதுகள்—சிறுபுழுதி, "பாததாமரையினுண்டு கட்பரம வணுவினில்" —சௌந்தரியலகரி - 2. ஆலின் சிறந்த—ஆலமரத்திலும் விரிந்த, பணுடவி-படக்காடு, படங்களின் மிகுதி "அராப் பொறுத்தவித்தாரணி" மறைசையந்தாதி பணுடவிப்பார் — ஆயிரமென்னும் படங்களேயுடைய ஆதிசேடன் தாங்குகின்ற பூமி. "மால், மூதரா வடிவெடுத் தனந்தமுது கணபணுடவிப்பார்" — சௌந்தரியலகரி - 2. யாமும் கருணம்பிகையின் பாதங்களே வணங்குதல் வேண்டு மென்பது கருத்தாம். அண்டம்—உலகம், சேலின்—கெண்டை மீன் போல, கெண்டை மீன் விரைவாகப் பிறழ்தலேயும் கவிழ் தலேயுமுடையது. அதுபோலப் பிரமனும் திருமாலும் அடிக்கடி தோன்றிப் படைத்தல் காத்தல்களே விரைவில் செய்தலின் அவர்கள் படைத்தல் காத்தல்களுக்குச் சேல் உவமையாயிற்று. இது செயலுவமை. சீதரன்—திருமால்.

**16.** சீத மதிக்குந் தணமிக்க நின்செல்வத் திருவடிப்ர
சாத மதிக்குமென் மேல்வைக்க வீசன் சகித்திலனே
வேதமதிக்கு மணவம்மி மீது விமல நின்பொற்
பாத மிதிக்கப் பொறுமலன் றேகரம் பற்றியதே.

சீதமதிக்கும்—குளிர்ச்சியாகிய சந்திரனைக்காட்டிலும், "சீத பூரணத் திங்கள் சிறந்ததே" —சௌந்தரியலகரி - 45. தணம்—குளிர்ச்சி; தண்ணம் என்பதன் இடைக்குறை. திருவடிப் பிரசாதம்—திருவடிப்பேற்றை, அம்மி மிதித்தல் வேத சம்பிரதாயமான திருமணங்களிற் செய்யப்படுதலின் "வேத மதிக்கும் மணவம்மி" என்றார். விமலம்—தூய்மை, அழகுமாம், கரம்—கை,

அம்மி மிதித்தல் என்பது திருமண காலத்தில் மணமகன் மணமகள் பாதத்தைக் கையால் பற்றி அம்மிக் கல்லின்மீது வைப்பது. இது மரபு. அம்பிகையே நின் திருமணக் காலத்தில் நீ அம்மி மிதிக்கும்பொழுது சிவன் நின் பாதத்தைக் கையாற் பற்றியது வலிய கல்லின்மேல் வைத்தால் நின் பாதம் வருந்துமென்று கருதியதனாலேயாம் என்றது ஆசிரியரின் கற்பனை. இயல்பாகிய ஒன்றில் ஆசிரியர் கற்பனையையேற்றிக் கூறியதனால் இது தற்குறிப்பேற்றவணியாம். கல்லினும் வலிய நெஞ்சமுடைய என் தலைமேற் சூட்டின் நின் பாதங்கள் வருந்துமென்று சிவன் சகிக்காமையினாற்போலும் நீ என் தலைமேல் திருவடி சூட்டாதது என்றனர்.

"படைத்திடுந் தொழிலோன் மறைச்சடங் கியற்றப்
பாவியேன் மனத்தினும் வலிய
பன்மணி குயின்ற செம்பொ னம்மியினின்
பதமலர் வைத்தகலாமல்
இடத்தினினுனை வைத்தருளுதல்"

—பெரியநாயகியம்மை திருவிருத்தம் - 8.

விமலனின்பொன்—பி. ம்.

17. பற்ருர் புரங்குறு மூரலிற் காய்ந்தவன் பங்கில்வளர்
முற்ரு முகின்முலை மொய்குழலாளை முனிவர் தொழும்
வற்ருக் கருணை மணியைக் கருத்திவில் வைத்திறைஞ்சப்
பெற்ருரன் ருேவந் துதித்தத னுற்பயன் பெற்றவரே.

பற்ருர்—பகைவர், அசுரர், புரம்—முப்புரம், குறுமூரல்—புன்சிரிப்பு, காய்ந்தவன்—எரித்தவன். ''மேலைப் புரத்தை நகைத் தெரித்தீர்வில்வேள் புரத்தைப் பகைத்தெரித்தீர்'' — அருணைக் கலம்பகம். ''புரமூன்றத்திரவன்னிக் கருணகையார்'' — மறைசையந்தாதி-16.

முகிழ் முலை-கோங்கரும்பு போன்று குவிந்த தனம் ''கோங்கரும் பார மணிமுலை'' — மறைசையந்தாதி. ''பொங்கு வெம்முலை பூமுகிழாமென'' — சீகாளத்திப் புராணம் கண்ணப்பச் சருக்கம். மொய்—அடர்ந்த, கருணம்பிகையைக் கருத்தில் வைத்து வணங்கியவரே பிறவிப் பயன் பெற்றவராவர் என்பது இப்பாடலின் கருத்து.

18. பெற்றவள் பிள்ளையைப் பேணு விடிலந்தப் பிள்ளைதன்மை
மற்றெவர் கட்குத் தெரியுஞ்சொல் லாயுன்னை வந்துதஞ்ச
முற்றவென் றுன்ப மொழியாய் தவஞ்செய் துயர்ந்தவர்க்குங்
கற்றவர் கட்கு மமுதே கருணையங் கற்பகமே.

பேணுவிடில்-காப்பாற்ருமல் விட்டால், தன்மை—துன்புற்றிருக்குந்தன்மை, மற்று—வேறு, தஞ்சம்—அடைக்கலம், ஒழியாய்-ஒழிப்பாய், அம்—அழகிய. கற்பகமே—கற்பக விருட்சமாயுள்ளவளே. ஒத்த நூற்பகுதிகள்—''தாயறிவாள் மகவருமை'' — தண்டலையார் சதகம்.

''பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளை, பெருப் பேதையறிவளோ'' — தாயுமானவர் பாடல் 954.

''தாயிற் சிறந்த தமரில்லை'' — நான்மணிக்கடிகை.

19. கற்பமுங் கற்பகக் காவும்வெண் மாவுங் கடவுளர்கள்
பற்பலர் சூழ்பத மும்பெறுவா ரிடப்பாலே முக்கட்
டற்பர ருக்குத் திருவவி நாசித் தலத்துதவுஞ்
சிற்பரை யைத்தினந் தோறும் பணிந்தன்பு செய்பவரே.

கற்பகம்–தேவலோகம், அமுதமாகிய மருந்து எனினுமாம். கற்பகக்கா–கற்பகச் சோலை, வெண்மா—ஐராவத யானை, கடவுளர்—தேவர்கள், பதம்—இந்திர பதவி, தற்பரர்—சிவ பெருமான், சிற்பரை—கருணாம்பிகை, அவிநாசியில் அம்பிகை யின் இடப் பாகத்தில் சிவன் வீற்றிருத்தலின் '' இடப்பாலைத் தற்பரருக்கு அவிநாசித் தலத்துதவும் சிற்பரை '' என்றார். இது உபசாரம்.

கருணாம்பிகையை அன்புடன் வழிபடுவோர் இந்திர பதவியையடைவார்கள் என்பது கருத்து.

'' விரவும் புதுமல ரிட்டுநின் பாத விரைக்கமல
மிரவும் பகலு மிறைஞ்சவல் லாரிமை யோரெவரும்
பரவும் பதமு மயிரா வதமும் பகீரதியும்
உரவுங் குலிசமுங் கற்பகக் காவு முடையவரே. ''
— அபிராமியந்தாதி - 83

20. பவக்கொடுந் தீவினைக் கேபற்று மைந்து
பகைஞர்செயும்
அவக்கொடுஞ் சூழலிற் பட்டுழல் வேனைவந்
தஞ்சலென்பாய்
தவக்கொழுந் தேநற் றிருவவி நாசி தனின்முளைத்த
சிவக்கொழுந் தைப்புணர் கொம்பே கருணைத்
திருமகளே.

பவம்—பாவமாகிய, கொடுந்தீவினை—மிகவும் கொடுமை யாகிய தீச்செயல்களை, வேற்றுமை மயக்கம். ஐந்து பகைவர்–மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகள். ஐம் பொறிகள் பகைவர் போல் நன்மையையடைதலில் தடை புரிதலின் ஐந்து பகைவர் என்றார். பொறிகளை ஐவர் என்று

உயர்திணையாற் கூறியது இழிவின் மிகுதியினல். ''ஐவரா லலைக்கப்பெற்றுக் கடலிடைத் தோணி போன்றேன்'' — அப்பர் தேவாரம். அவம்—வீணுன, கொடுஞ்சூழல்—தீவினைக் கூட்டம், கொடுமையாகிய சூழ்ச்சியெனினுமாம், உழல் வேனை—அலைகின்ற என்னை, அஞ்சல் – அஞ்சாதே, எதிர்மறை வினைமுற்று. தவக்கொழுந்து—தவமாகிய கொழுந்து, சிவக் கொழுந்து—சிவமாகிய கொழுந்து, ''தேவா திருச்சத்தி முற்றத்துறையுஞ் சிவக்கொழுந்தே'' – நாவுக்கரசர் தேவாரம், புணர்– சேர்ந்திருக்கின்ற, பூங்கொடி—பூவையுடைய கொம்பு. ''சகவாழ்வை யிகழ்ந்திதையந் தனித்தவர் தந்தவக் கொழுந்து தழைத்த கொம்பே'' — சௌந்தரியலகரி - 66. ''பசுத்த மலர்க்கொடி கருணை பழுத்தனைய கொம்பே''— சௌந்தரியலகரி - 65. சிவக்கொழுந்து மணக்குமொரு செழும் பூங்கொம்பு. — திருக்குற்ரு. புரா. - 2. கொம்பு—உவமை யாகுபெயர். கருணம்பிகையே திருமகளாக விளங்குதலின் ''கருணைத் திருமகளே'' என்ருர். ''சிறக்குங் கமலத் திருவே'' — அபிராமியந்தாதி.

21. திருவுந்திறமையுஞ் செவ்வியுங் கல்வியுஞ் செல்வமுஞ்சீர்
உருவு மொழுக்கமு முற்றிட லாமறை யுச்சிக்கெட்டாத்
தருவு முருவு மகண்டமு மண்டமு மானவனை
மருவுங் கருணை வடிவைத் தியானத்தில் வைத்தவரே.

திரு—அழகு, திறமை—வலிமை, செவ்வி—நல்ல பருவம், சீர் உருவும்—சிறப்பான வடிவம், மறையுச்சிக்கெட்டாத்தரு— வேதசிரசாகிய உபநிடதமென்னும் பறவைகளுக்கும் எட்டாத உயர்ந்த மரம், ஏகதேசகவுருவகவணி, உரு—பொருள்களின் வடிவம், அண்டம்—உலகம், அகண்டம்—வெளியுலகம் (எல்லாவுலகமும்), ஆனவன்—சிவபெருமான், மருவும்— சேர்கின்ற.

இச்செய்யுள் கருணம்பிகையின் திருவுருவத்தை நினைப் போர்க்குண்டாம் பயன் கூறியது. இதனுடன் ''தனந்தரும்'' என்னும் அபிராமியந்தாதி 69 பாடல் நினைவு கூர்க.

**22.** வைத்தவரி வேலன்ன கண்ணியர் கொங்கைக்கும்
வாளரவின்
பைத்தலை யல்குற்கும் ஏங்கிக்கண் ணுடியிப் பாருலகில்
பொய்த்தலை யாதருள் வைத்தே துணை
செயிப்போது கண்டாய்
நெய்த்தலை மூவிலைச் சூலங்கை தாங்கிய நீயெனக்கே

வை—கூர்மை, தலைபை—தலையிலுள்ள படம், (அல்குற் குப்பாம்பின் படம் உவமை) கண்நாடி—கண்களால் விரும்பிப் பார்த்து, பொய்த்து—பொய்சொல்லி, நெய்த்தலை—நெய்பூசப் பெற்ற தலை, மூவிலைச் சூலம்—முத்தலைவேல்

திரிசூலமுடையவளே நான் மகளிரை விரும்பி வருந்தா திருக்கும்படி அருள் துணை செய்வாய் என்பதாம்.

**23.** எனக்குத் துணையம்மை நியன்றிவேறிலை யேந்துசிறுர்
தனக்குப் பரிவது தாயன்றி மற்றிலைத் தாரணியில்
உனக்குப் பிறிதிங்கி யானுப சார முரைப்பதென்னே
கனக்கும் புவனங்கள் யாவையுமீன்ற கனங்குழையே

அம்மை–தாயே, அண்மை விளி, தனக்கு–தமக்கு, பன்மை யில் ஒருமை வந்த வழுவமைதி, பரிவது—அன்பு கொள்வது.

''தாயிற் சிறந்த தமரில்லை'' நான்மணிக்கடிகை-33, தாயினுஞ்சாலப்பரிந்து—திருவாசகம், தாயொத்தடியர்க்கருள் சச்சிதானந்த தற்பரமே, 760 தாயுமானவர் பாடல் ''தாயறி வாள் மகவருமை'' தண்டலையார் சதகம். இப்பாடலடிகளை முன்னிரண்டு அடிகளுடன் ஒப்பிட்டுக் காண்க, உபசாரம்—முகமன், புவனம்—பதினுன்குலகங்கள், பூத்தவளே புவனம் பதினுன்கையும்–அபிராமியந்தாதி 13, கனம் குழை–கனமாகிய காதணியணிந்தவள்,' அனைத்துயிர்க்கும் தாயாகிய நீயே எனக்குத் துணையென்பது கருத்து.

24. குழலுந் திருச்செவிக் கொந்தள வோலையுங் கோலவண்டு
சுழலும்பைங் காந்தளுஞ் சூடகக் கையும்பொற்
றேளுமணிக்
கழலுமின் பாடக மும்பூஞ் சிலம்புங் கலிக்கும் பொற்றாள்
நிழலுமென் னுயிக்கொரு துணை யாய்வந்து நின்றனவே

குழல்—கூந்தல், கொந்தளவோலை—கூந்தலையடுத்து விளங்கும் காதணி. ''புயலுண்டிருண்ட கொந்தளமும் பொன்னங்குழையும்'' முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் முத்தப் பருவம்-5, ''நாட்கொண்ட கொங்கைத் துணையும் பொன்னோலையும்'' அம்பிகைமாலை, கொந்தளப்பொற்றோடுங்காதும், தந்தி வனப்புராணம் காப்பு-2, காந்தள்—செங்காந்தள் மலர், ''காந்தள் போலியகரத்தினீர்'' கந்த—வள்ளியம்மை திருமணச் சருக்கம் காந்தள் மலரில் வண்டுகள் மொய்ப்பதில்லை என்பது திருமுருகாற்றுப்படை ''சுரும்பு மூசாச் சுடர்பூங் காந்தள் பெருந்தண் கண்ணிமிலைந்த சென்னியன்'' 43 44 முருகன் அணிந்த செங்காந்தள் மலரில் வண்டுகள் மொய்ப்ப தில்லை போலும், சூடகம்—வளையல்கள், மணிக்கழல்—அழகிய காலணிகள், அழகிய கால்கள் எனினுமாம், பாடகம்—இதுவும் ஒருவகைக் காலணி, கலிக்கும்—ஒலிக்கின்ற, சிலம்பு—இதுவும் காலணிவகையிலொன்று, தாள்நிழல்—திருவடிநிழல்

அம்பிகையின் கூந்தல் முதல் திருவடியீருகவுள்ளவை உயிர்க்குத் துணையாவனவாம், என்னுயிர்காக்க வருந்துணையே என முதற்பாடல் கூறுவதும் காண்க.

25. நின்றாலும் விற்றிருந்தாலும் துய்த்தாலும் நெடிதுநெறி
சென்றாலுங் கண்டுயின் றாலுமென் சிந்தையுன்
சேவடிக்கன்
ஒன்றா யிருப்பதல் லான் மற்றும் வேறில்லை யுத்தமியே
அன்றால மீசற் கமுதாக் கியமெய் யருண்மயிலே

வீற்றிருந்தால்—தனித்திருந்தால், ஆசனத்திருத்தல் எனினுமாம், துய்த்தல்—புசித்தல், நெறி—வழி, முதல் மூன்று அடிகளுடன், கீழ் வருவனவற்றை ஒப்பிட்டுக் காண்க.

'' நின்றுமிருந்துங் கிடந்துநினைமின்கள். என்றுஞ்சிவன் ருளிணை '' சங்கற்பநிராகரணம்.

'' நின்றுமிருந்துங் கிடந்து நடந்து நினைப்பதுன்னை
என்றும் வணங்குவதுன்மலர்த்தாள் ''

அபிராமியந்தாதி-9

ஆலம்—விஷம், ஆலமமுதாக்கியது — '' வார்சடையோன் அருந்திய நஞ்சமுதாக்கியவம்பிகை'', அபிராமியந்தாதி.5

'' வீக்குஞ் சடாடவி யாருண்ட காளவிடத்தையமு
தாக்குஞ் சிவானந்தியேமது ராபுரியம்பிகையே ''

அம்பிகைமாலை-26 என்பவற்றாலும் விளங்கும்.

'' அருளது சத்தியாகுமரன்றனக்கு '' எனச் சிவஞான சித்தியார் கூறுவதனால், அம்பிகையை அருள் என்றும், மயில் போன்ற சாயலுடைமையால் மயிலே என்றும் கூறினார். '' மலையரையனுதவுமயிலே '' சௌந்தரியலகரி 18, '' ஆனந்த ரூப மயிலே '' தாயுமானவர் பாடல்-941.

**26.** **மயிலே களப மடப்பிடி யேயிம வான் மகிழ்ந்து**
**கயிலேச னுக்கருள் கன்மணி யேகக னத்திறைக்கும்**
**வெயிலே கருணை விளக்கேதென் புக்கொளி வேதவனக்**
**குயிலே யருட்கொடி யேயடி யேன்றுண்டு**
**கொண்டவளே**

களபம்—வாசனைச் சாந்து, விநாயகனும், முருகனுமாகிய யானைக்கன்றுகள் எனினுமாம், மடப்பிடி—இளமையான பெண்யானை போன்றவள், ''மாலிமயத்து மடப்பிடிபெற்று வளர்த்த விளங்களிறே'' முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், '' கூந்தல் செழும்பிடி பயந்தளித்த சிறுகட் பெருஞ்செவிக்குஞ் சரக் கன்றின் '' முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் காப்பு-1. ககனத்து இறைக்கும் வெயிலே—வானில் நிறைக்கும் சூரிய ஒளியாயிருப்பவளே ''வெயிலாயிருக்கும் விசும்பில்'' அபிராமியந்தாதி-99, வெயில் — சூரியன் எனினுமாம்

வேதவனக்குயிலே—வேதமாகிய காட்டில் வாழும் குயிலாயிருப்பவள், ''குயிலாயிருக்குங்கடம்பாடவியிடை'' அபிராமியந்தாதி-99. நூலாசிரியர் கருணும்பிகைக்குத் திருத்தொண்டு செய்து வாழ்ந்தவரென்பது இப்பாடலால் விளங்கும்.

27. கொண்டலே வென்ற குழலிய ராசைக் கொழுங்கனியை
யுண்டலேயாதுன் னருள்வழிக்கேயுயி ருய்யச்
செய்யாய்
விண்டலேக் குங்குட முட்களித்தேறல் விழைந்தொழுகு
தண்டலேக் கற்பகப்புக்கொளி யூர்ச்சிவ சங்கரியே.

கொண்டல்—மேகம், குழலியர்—கூந்தலேயுடையவர்களாகிய மகளிரென்னும், ''பூங்குழலின் சுருளுக்குப் பைம்புயல் தோற்கயின்ருளுக்கு''—உலகம்மையந்தாதி, ஆசைக்கொழுங்கனி—பெருவிருப்பத்திற்குரிய கொழுமையாகிய பழத்தை, உண்டு—சுவைத்து (அனுபவித்து), அருள்வழிக்கே—அருளாகிய வழியிலே சென்று, விண்டு—ஆகாயம், வெடித்து எனினுமாம், அலேக்கும்-வருத்துகின்ற, குடம்முட்களித்தேறல்-குடம் போன்ற முள்ளேயுடைய பலாப்பழத்தின்தேன், ''முருகவிழ் சுளேவாய் விண்ட முட்புறக்கனியின்றேனும்'' நைடதம்-20. ''பலவின் முட்பொதிமுடக்கனியோடு'' மீனுட்சியம்மை பிள்ளேத்தமிழ், விழைந்து—பெருகி, தண்டலே—சோலே.

28. கரியுங் கவிகையுந் தேரும் பதாகினியுங்கவனப்
பரியுஞ் சிவிகையும் பன்மணி யாரமும் பாலமுதஞ்
சொரியுங் கருணேச் சவுந்தரி நூபுரச் சோதிதுன்றி
விரியுங் கழற்கன்பு செய்வார்க்குண்டான விருதுகளே.

இது கருணும்பிகையின் திருவடிகளுக்கன்பு செய்வோர் பெறும் பயன் கூறுவது.

கரி—யானே, கவிகை—குடை, பதாகினி—படை, கவனம் பரி-வேகமான குதிரை, சிவிகை—பல்லக்கு, பன்மணியாரம்—நவரத்ன மாலே, சவுந்தரி—அழகுடையவள், நூபுரம்—சிலம்பு, விருதுகள்—வெற்றிச் சின்னங்கள்.

'' வையந்துரக மதகரி மாமகுடஞ்சிவிகை
பெய்யுங் கனகம் பெருவிலையாரம் பிறைமுடித்த
ஐயன் திருமனை யாளடித் தாமரைக் கன்புமுன்பு
செய்யுந் தவமுடை யார்க்குள வாகிய சின்னங்களே.
அபிராமியந்தாதி—52

29. விருதிட்ட வென்றி மகிடா சுரன்புய வெற்பொடியப்
பொருதிட்ட வாகைப் பொலன்கொடி யேயுன்னைப்
போற்றியுள்ளங்
கருதிட்ட போதுங் கவலையுண் டோவென் கருத்துக்கிது
பொருதிட்ட மோவுரை யாயறி யார்மடப் பேதமைக்கே.

பொற்கொடி போன்றவளே உன்னை நினைப்போர்க்குக் கவலையில்லை என்பதையறியாமையுடையோர் அறியாமைதீர்ந்துய்தற் பொருட்டுச் சொல்லியருள்வாய் என்பது கருத்து.

விருதிட்ட—விருதினைக்கொண்ட, மகிடாசுரன்—மகிடன் என்னும் அசுரன், எருமை முகமுடையவன், புயவெற்பு—தோள்களாகிய மலைகள், உருவகம், பொருதிட்ட—போர் செய்த, வாகை—வெற்றி, பொலன்—பொன், கருதிட்ட—கருதிய, உண்டோ எதிர்மறையோகாரம் இல்லை என்பதாம். இது—நினைப்போர் கவலை தீர்த்தருள்வதாகிய இது, சுட்டுப் பெயர். பொரு-பொருந்திய, திட்டமோ-ஏற்பாடோ, ஓகாரம் உடன்பாடு உடன்பாடேயாம் இதனை, அறியார்—அறியாமை யுடையவர்களுடைய, பேதமைக்கே—அறியாமை தீர்ந்துய்தற் பொருட்டாக; மகிடாசுரன் தேவர்முதலியவர்களுக்கு எண்ணில்லாத காலம் துன்பம் செய்து வந்தான். அம்பிகை சகலதேவ சக்திகளின் சொரூபமுடைய துர்க்கையாய்த்தோன்றி மகிடனுடன் போர் செய்து அவனைக்கொன்று தேவர் முதலியோருடைய துன்பத்தைப் போக்கினள். அதனல் மகிழ்ந்த தேவர்கள் அம்பிகையை '' மகிஷாசுர தீரவித்ய நிக்ர ஹாயை நமோ நம'' என்று துதித்தார்கள். '' மகிடற்கொன்றவேதாதி கலையதித வித்தகியே '' என்பது தேவிமான்மியம்.

கருணம்பிகை துர்க்கையாய்த் தோன்றியருள் செய்ததைப் பிறவிடத்தும் கூறினர் இந்நூலாசிரியர்.

**30.** தமைப்புகழ் வார்பெருஞ் செல்வம்வந் தாற்றெய்வச்
சார்பையுன்னர்
சுமைப்படுந் துன்ப மிடிப்பாழ்ல் வேதனைத் தூற்றிடுவார்
எமைப்புரந் தாண்டருளுங்கரு ணாலய விஸ்வரிதன்
அமைப்பிது வாமென் றுணரா ருலகந் தறிவிதுவே.

தெய்வச்சார்பு-தெய்வம்சார்தலை, தெய்வத்தின்உதவியை
'' செல்வம் வந்துற்றபோது தெய்வமுஞ் சிறிதும் பேணர் ''
விவேகசிந்தாமணி

துன்பமிடி—துன்பத்தைத் தரும் வறுமை, '' எற்றுள்ளும் இன்மையினின்னுததில் '' நான்மணிக்கடிகை-30, வேதன்—பிரமன், அமைப்பு—ஏற்பாடு, உலகத்துணரார்—உலகத்தில் உண்மையுணராதவர், இது அறிவு—செல்வத்தால் தெய்வச் சார்பு கொள்ளாமையும், வறுமைவந்தால் பிரமனைப் பழித்தலும் ஆகிய இவையே அறிவாம். இது ஒருமையிற் பன்மை வந்த வழுவமைதி.

'' தளர்வுவந்தெய்தின் விதியினை நோவர் தழைக்குஞ் செல்வக்
கிளர்வுவந்தெய்தில் தமைத்தாம் புகழ்வர் கிளைத்தபசுந்
துளவுவந்தோனும் முளரிவந் தோனுந் துதித்து நிற்பக்
களவுவந் தோன் செய்த கற்பனையீதென்று
காண்கிலரே ''

திருக்கருவைக் கலித்துறையந்தாதி, கருணையந்தாதி 48 பாடல் நோக்குக.

**31.** அறியா மையிற்சிறி யோர்பிழையாற்றி லறஞ்சிறந்த
நெறியார் பொறுத்தருள் கூர்வதன் றேகொள்கை
நீர்மையில்லா
வெறியாமென் புன்மதி மாற்றிமெய் ஞானம்
வியந்தளித்தல்
பொறியா முனக்கன மேயிமயாசல புத்திரியே.

அறியாமையில்—நல்லறிவின்மையால், பிழையாற்றில்—தவறு செய்தால், சிறந்த அறநெறியார்—சிறப்பான அறவழியில் நிற்றற்குரிய பெரியோர்கள், கொள்கை—கோட்பாடு, ''சிறியோர் செய்த சிறு பிழையெல்லாம், பெரியோராயின் பொறுப்பது கடனே'' வெற்றிவேற்கை.

''வெறுக்குந்தகைமைகள் செய்யினுந் தம்மடியாரை மிக்கோர்
பொறுக்குந் தகைமை புதியதன்றே''

அபிராமியந்தாதி-42

நீர்மை — நல்லகுணம், வெறியாம் — கலக்கமுடைய, புன்மதி—அற்பமானஅறிவு, வியந்து—பாராட்டி, அளித்தல்—கொடுத்தல், உனக்குப்பொறியாம்—உனக்குச் சிறந்த அறிவாம், எனது புல்லறிவை மாற்றி உண்மையறிவைக் கொடுத்தல் பேரறிவுடைய உனக்கு அறிவாம் என்பது கருத்து. பொறி—அறிவு, இமயாசலம்—இமயமலையரசன்.

**32.** புத்தா ரமுத மொழுகுஞ்செவ் வாம்பல் புரிகுழலும்
முத்தார முஞ்சண்பை யார்க்கமு தூட்டு முலைத்தடமும்
கொத்தாருங் கிண்கிணிப் பொற்றாள் களுங்களி கூர்ந்துதொழப்
பத்தா யிரங்கண் படைத்தா விலைமலர்ப் பண்ணவனே.

புத்தாரமுதம்—புதுமை நிறைந்த அமிர்தம். செவ்வாம்பல்—செவ்வல்லி மலர்போன்ற வாயும், எண்ணும் மைதொக்கது. புரிகுழல்–கற்றையாகிய கூந்தல். முத்தாரம்–மார்பில் விளங்கும் முத்துமாலை. சண்பையார்க்கு — சீகாழிப் பதியில் தோன்றிய திருஞானசம்பந்தருக்கு. அமுது — பால். தடமுலையும் — பெரிய முலையும், ''வருண நன்குறு கவுணியன் சிறுமதலையம்புயல் பருகியே பொருணயம்பெறு கவிதையென் றெரு புனிதமாரி பொழிந்ததே'' சவுந்தரியலகரி-74. கொத்து ஆரும்—திரளாக நிறைந்த. கிண்கிணி—கிங்கிணியென்னும் சிறு சதங்கைகள். தாள்–பாதம். தொழ–கண்டுதொழுதற்கு. பண்ணவன்—பிரமன்.

"சேலார் வயற்பொழிற் செங்கோடனைச் சென்று கண்டுதொழ
நாலாயிரங் கண்படைத்திலனே யந்தநான் முகனே"
கந்தரலங்காரம்.

"பதவாயுதக்கொடி வேடாதை கீர்த்தியைப்பாடுதற்குச்
சதவாயு நாவுந்தந்தானில்லை வாணி தலைமகனே"
மறைசையந்தாதி.

**33.** பண்ணிர்மை சூழ்பழம் பாடலிற் புக்கொளிப் பார்ப்பதியைக்
கண்ணிர் பெருகத் துதித்துரு காமல்வெங் கானலைமான்
தண்ணிரென் றோடித் தளர்வது போலென்றுஞ் சஞ்சலத்திற்
புண்ணிர்மை கொண்டுநெஞ் சேகழித் தாய்பல போதையுமே.

பண்ணீர்மைசூழ் — பண்ணியல்புகள் நிறைந்த. பழம் பாடலில் — பழமையான வேதப் பொருள்கள் அமைந்த பாடல்களினால் "வேதமுறுவன பாட்டுள" – நான்மணிக்கடிகை. கண்ணீர் பெருக — அன்பினால் கண்களில் நீர் பெருகுமாறு. "ஆர்வலர் புண்கணீர் பூசறரும்" திருக்குறள். "கண்கள் தொடுமணற் கேணியிற் சுரந்து நீர் பாய... ..அன்பராகுன ரன்றி" நால்வர் நான்மணிமாலை. கானல்—வெயில் வெப்பத்தினால் நீர் போல் தோற்றமளிப்பது பேய்த்தேர். தளர்வது போல் — தண்ணீரல்லாமையால் மனதில் வருத்தமடைவது போல, (பொய்ப்பொருள்களை மெய்ப்பொருள்களென்றெண்ணிச்சென்று அவை மெய்ப்பொருள்களல்லாமையால்) சஞ்சலத்தில் — அதனால் வரும் துன்பத்தினால், புண்நீர்மை கொண்டு—புண்போல் துன்பமடைந்து. பல போதையும்—பல நாட்களையும்.

**பண்கள் :**

பண்ணமைதியுடைய பாடல்களே சிறப்புடையன. 'பண் சுமந்த பாடற் பரிசுபடைத்தருளும் பெண்சுமந்த பாகத்தன்' திருவாசகம். பண்கள் நூற்று மூன்றும்; அவை செம்பாலை

முதலியன. பண்கள் ஏழிசைகள் ஒன்றுடனொன்று கூடலால் பிறக்கும். ஏழிசையாவன குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. பண்களினுல் பைரவி தோடி முதலிய இராகங்கள் பிறக்கும். இவ்விசைகள் தமிழ் மொழிக்குச் சிறப்புத் தருவனவாம். ''எங்கோன் பொன் னடிகள் நோவ, ஏழிசை முத்தமிழதனுலேவல்கொண்டோன்'' தந்திவனப் புராணம் — பாயிரம் 4. பண்களின் விரிவு பஞ்ச மரபில் விரித்துக் கூறப்பட்டுள்ளது.

34. போதாவென் புன்மொழிப் பாடலை வேதம் புகுந்திருக்
காதாரக் கேட்டெம் பிராட்டியு முள்ளக் கருணையினற்
சீதா பதிபர வுங்கரு ணுலயச் செல்வி யென்னை
மாதா வுதரத் துறுநடைத் தாள் சென்ம வாசலையே.

போதா — திருந்தாத, புன்மொழிப்பாடல் — பொருள் நிரம்பாத சொற்களாலாகிய பாட்டு, ''மணநாறு நின்ருளிணைக் கென், நாத்தங்குபுன் மொழியேறியவாறு நகையுடைத்தே'' அபிராமி - 26. ''மனக்காக்கை மூவர் தமிழ்க் குயில் வாணியை வைத்த குழை யுனக்காக்கை வஞ்சவினை யேன்யுன்னுவி லுரைத்த தமிழ்'' - மறைசையந்தாதி. பிராட்டி—பெருமாட்டி, சீதாபதி—இராமன், உதரம்—வயிறு. சென்மவாசல்—பிறப்பு வழி.

35. வாசலை யொன்பதை வைத்தே யியற்றி வழும்பை யென்பின்
மூசலைத் தோலின் புறம்போர்த்து மூடிமுடித்துலகின்
வீசலைப் பாச வினைக்கயிற் ருற்கட்டி விட்டசடத்
தூசலை யாற்றுகி லேன்கரு ணுலய வேதிமமே.

வாசல்—வழி, கண் காது மூக்கு வாய் குதம் குய்யம் ஆகிய இவற்றின் வழிகள் ஒன்பது. ''நாற்றச் சடலத்தையொன்பது வாயில் நடைமனையை'' தாயுமானவர் பாடல் 777. ''ஒன்பது வாய்ப் புலனுங் கோதிக் குழம்பலைக்குங் கும்பத்தை'' - நாலடியார் 47. வழும்பு—நிணம். என்பு—எலும்பு. மூசல்—

மொயக்கப்பட்டது. தோலின் புறம் போர்த்து — தோலினுல் வெளியே மூடி, ''என்புதோல் போர்த்த வுடம்பு'' – குறள் 80. ''தோலுடுத் தென்பெழுமி யாக்கையன்'' சிதம்பரமும் மணிக்கோவை — 2.

''தோற்போர்வை மேலுந் துளைபலவாய்ப் பொய்
மறைக்கும் மீப்போர்வை மாட்சித்துடம்பானுல்......

நாலடியார் - 42.

''கழிநிறைத்திறைச்சி மேய்ந்து தோல்படுத்து''

அப்பர் தேவாரம்

உலகின் வீசலே — பூவுலகில் வீசப்பட்டதை (உடம்பை) சடம் — உடம்பு. ஊசல் — ஊஞ்சல். அங்குமிங்குமலேதலினுல் உடம்பை ஊசலென்ருர். ''தொல்லேச் சென்மநிலே வேதனே யென்றுழலூசல்போல நினேயுநெஞ்சில்''

மறைசையந்தாதி - 32.

ஆற்றுகிலேன் - தாங்கமாட்டேன். ''இப்படிவச்சுமைதாங் கரும்பாரமினிப் பிறவாமுத்திதந்தருளே'' மறைசையந்தாதி. ஓதிமம் — அன்னப்பறவை. உவமையாகுபெயர். ''அட்ட சித்தியுந லன்பருக்கருள, விருது கட்டிய பொனன்னமே''

தாயுமானவர் — 945.

36. ஓதி யுணர்ந்தமெய் ஞாவிய ருள்ளத் துதித்தபரஞ்
சோதியை யானந்த சுந்தர வல்லியைத் தொல்லே மறைக்
காதியை யாவர்க்கு மெட்டாத புக்கொளி யன்னைவலப்
பாதியை யென்சிறு புன்றுவிலென்சொல்லிப் பாடுவதே

தொல்லே — பழமை. மறைக்கு ஆதி — வேதமுதல்வி. ''மெத்து தேவரு மறியொ்ணு வேதத்தின் தலேவி'' தேவி மான்மியம் — 4. அத்தியாயம் 8. புக்கொளி — புக்கொளியூர்.

37. பாடுஞ் செழுந்தமிழ்ப் பாமாலை யென்றுமுன் பாதத்துக்கே
சூடும் படிக்கருள் தோற்றிவைப் பாய்புல்லர் சூழலிற்போய்
நாடு மகிழ்ச்சியை நாவிங் குருமலுன் நாள்மலர்த்தாள்
கூடும் படிசன் மார்க்கத்தில் வைத்தருள் கொற்றவையே

புல்லர் சூழல் — அற்பர்கூட்டம், வெள்ளைக்கோட்டி, என்பது சிலப்பதிகாரம். ''வெள்ளைக்கோட்டியும் விரகினி லொழிமின்'' வரந்தருகாதை — 198.

நாடும் மகிழ்ச்சி — அடையும் மகிழ்ச்சி. ''வறுநகையாள ரொடுவம் பப்பரத்தரொடு, குறுமொழி கோட்டி நெடுநகை புக்கு'' சிலம்பு கொலைக்களக்காதை 63 — 64. நாள்மலர் — அன்றலர்ந்தமலர். மலர்தாளுக்குவமை. சன்மார்க்கம் — நல் வழி. கொற்றவை — அம்பிகை. ''கொற்றவைசிறுவ'' முருகாறு.

38. வையேறு செந்துகிர் வாய்ப்பசுங் கிள்ளை வனசமலர்க்
கையேற வைத்த கருணம் பிகையைக் கருதுகிலீர்
பொய்யேறு மிப்புன் குரம்பையைப் போற்றிப் புதுக்கிமெத்தல்
மெய்யேயென் றுன்னி யிருந்நீர்பின்னந்தகன் வேதனைக்கே.

வையேறு—கூர்மை பொருந்திய. செந்துகிர்வாய்—சிவப் பாகியவாயினையுடைய, பசுங்கிள்ளை — பச்சைக்கிளி. வனச மலர்க்கையேற — தாமரைமலர்போன்ற திருக்கரத்தில் பொருந்தும்படி. கருணம்பிகை — கையில் கிளி வைத்திருப் பவள். ''அங்கைகளிலே, அபயவரதமுடன் பாசாங்குசங் களும், அழகினமர் பைங்கிள்ளையும் '' கருணம்பிகை பிள்ளைத் தமிழ், பொன்னூசல் - 6. புன்குரம்பை—இழிவான உடம்பு, புதுக்கி — ஆடையணிகளால் புதுக்கி.

கருணம்பிகையைக் கருதாமல் உடம்பைப்புதுக்குவது இயம வேதனைக்குதவாது.

**39.** வேதாந்த சார நறுந்தே னொழுக விரிந்த கஞ்சப்
போதார்ந்த பச்சைப் பசுங்கொடி கும்பக பூரகத்தை
யேதார்ந் தலைநின் றிருமூன் றையுங்கடந் தேறினர்க்கு
நாதாந்த யோகந் தருங்கரு ணாலய நாயகியே.

வேதாந்தம் — வேதத்தின் முடிந்த பாகமாகிய உபநிடதங்கள். சாரம் — வடித்தெடுத்த ஞானம். சாரநறுந்தேன் — சாரமாகிய நல்லதேன். ஒழுக — ஒழுகும்படி, கஞ்சம்போது — தாமரை மலரில், உள்ளத் தாமரை மலர் எனினுமாம். ஆர்ந்த — பொருந்தியிருக்கின்ற. அம்பிகை தாமரை மலராகிய ஆசனத்தில் வீற்றிருப்பவள். ''ஆடகத்தா மரையார ணங்கே'' 80. அருணாம்புயத்துமென்சித்தாம்புயத்துமமர்ந் திருக்கும், தருணாம்புயமுலைத்தையனல்லாள்'' 58. பச்சைப் பசுங்கொடி - மிகவும் பசுமை நிறமான பூங்கொடி போன்றவள். அம்பிகையின் நிறம் பசுமை ''பச்சைப் பெண்டங்கடுத்தது பார்மறைக் காட்டுறை பேரொளிக்கே'' மறைசையந்தாதி. கும்பகம்—வாயுவை உள்ளே கும்பித்தல். இது பிராணாயாமத் தொன்று. பூரகம் — பூரித்தல், மூச்சை உள்ளே வாங்கல். ரேசகம்—பிராணவாயுவை விடுதல். ஏது ஆர்ந்து—எத்தனத்துடன் நிறைவுறச்செய்து, அலைநின்று — அலைதலைவிட்டு, இருமூன்று —ஆருதாரங்கள். அவை மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகரகம், விசுத்தி. ஆஞ்ஞை, ஏறினர்க்கு — சிரத்திலே ஆயிரமிதழுடன்கூடி நிற்கும் சகஸ்ராரமென்னும் தாமரை மலரில் ஏறினவர்களுக்கு, நாதாந்த யோகம் — சிவயோகம். தரும்—தருவாள். செய்யுமென்வினைமுற்று பெண்பாலில் வந்தது. நாயகிதரும் எனக் கூட்டுக. சிவயோக சித்தியைத்தருபவள் கருணாம்பிகை.

**40.** நாயிற் கடைப்படு வேனைவின் னுடர் நயந்துதொழுங்
கோயிற் புறந்திருத் தொண்டர் குழாத்தொடுங் கூட்டிப்பெற்ற
தாயிற் சிறந்த தயாவைநைத் தாட்கொண்ட தன்மை
யொரு வாயிற் புகறற் கெளிதோ கருணை மகிமையையே.

கருணாம்பிகை கடைப்பட்ட என்னைத் தன்னடியார்களுடன் கூட்டி ஆட்கொண்ட தன்மை சொல்லுதற் கரியதென்பது கருத்து. விண்நாடர்—தேவர்கள், குழாம்—கூட்டம், கூட்டி- சேர்த்து. ''கூட்டிய வாவென்னைத் தன்னடியாரில்,'' அபிராமி-80. தயாவை—கருணையை, ''நாயிற் கடையாய்க் கிடந்த வடியேற்குத், தாயிற் சிறந்த தயாவானதத்துவனே.''

41. மையைக் கயல்விழிக் கூட்டிய மாதர் மயக்கமெனும்
பொய்யைச் சிறிதும் பொருந்தாமற் புந்தியைப்
போதவன்பின்
நெய்யிற் கருத்தில் விளக்கேற்றிக் கொண்டிந்த்ர
நீலமிளிர்
மெய்யைக் குறித்திருப் பார்பெறு வார்பர வீட்டின்பமே.

புந்தியை—அறிவால், வேற்றுமைமயக்கம், அன்பின் நெய்-அன்பாகியநெய், கருத்தில் விளக்கு—எண்ணமாகிய விளக்கு; விளக்கு-ஒளி, இந்த்ர நீலமிளிர் மெய்-பசுமையாகிய இந்த்ர நீலரத்தினம் போன்ற கருணாம்பிகையின் திருமேனி, குறித்திருப்பார்—நோக்கியிருப்போர், பரம்—மேன்மை, வீட்டின்பம்-முத்தியின்பம். புந்தியால் குறித்திருப்பார் எனக் கூட்டுக

அன்பே தகளியா வார்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா — நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்

என்னும் பூதத்தாழ்வார் பாடிய இரண்டாந்திருவந்தாதிப் பாடல் நோக்குக.

42. விட்டிப் பொறிகர ணாதியைக் காமவெகுளி முதல்
வாட்டிப் பிரபஞ்ச மயக்கங்கள் நீங்கி மனத்தை
யொன்றாய்க்
கூட்டி யசைவற் றிருந்தே கருணையங் கொம்பையுளம்
நாட்டிக் குறிப்பவர்க் காஞ்சிலம் பாலிக்கும் நாதங்களே.

பொறி-ஐம்பொறிகள், கரணுதி-அந்தக் கரணம் முதலிய வைகள், கரணம்—மனம் புத்தி சித்தம் அகங்காரம், வீட்டி—வீழ்த்தி, கெடுத்து, முதல் என்றதனுல் காமவெகுளிகளுடன் அவற்றிற்கினமாகிய மயக்கமும் கொள்க. இவை மனதின் முக்குற்றங்கள். வாட்டி — வருத்தி, மெலியச் செய்து, பிரபஞ்ச மயக்கம் — உலக மயக்கம், அசைவற்று — சலன மில்லாமல், குறிப்பவர் — நினைப்பவர், சிலம்பு நாதங்கள் ஆலிக்குமாம் எனக் கூட்டுக, தேவியின் காற் சிலம்பொலிகள் ஒலிக்கும். ஆம்—அசை.

**43.** நாதங் கடந்த வொளிக்கொளி யாங்கரு ணும்பிகைபூம்
பாதங்கட் கன்பு பரியார்கள் சற்றும் பரிவிலரா
யோதங்கொ ணீர்வரைப் போங்குமிக் கோர்சொல்
லுரையிகழ்வார்
போதங்க ளில்லவ ராய்த்திரி வார்கொடும் புல்லரென்றே.

நாதம்—சிவதத்துவம், அதனைக் கடந்து விளங்குவது சத்திதத்துவம், பூம்பாதம்—அழகிய பாதங்கள், பரியார்—வையாதவர்கள், செய்யாதவர், பரிவு இலராய்—இரக்க மில்லாதவர்களாய், ஓதம்கொள் — குளிர்ச்சி பொருந்திய, நீர்வரைப்பு—கடல் நீரை எல்லையாகவுடைய பூமியில், ''மணி வளர் கடல் சூழ்மாநில வளாகம், புலவராற்றுப்படை — ''எல்லை நீர்ஞாலத்திசை விளங்க'' புறப்பொருள் வெண்பா-193. போதங்கள் - பலவகையான நல்லறிவு. கொடும் புல்லர்—கொடுமைபுரியுங் கீழ்மக்கள்.

**44.** புல்லிலை நீரும் புனர்மேற் குமிழியும் புட்கரத்தின்
வில்லிடு வில்லு மெனத்தோன்றி வீழுமிம்மெய்யைநிலை
சொல்லிடும் பேதைத்துணிவை யொழித்துச்
சுகநெறியிற்
செல்லிடும் புந்தி தருங்கரு ணும்பிகை சேவடியே.

புல் இலைநீர்—புல்லினது இலை நுனியிலுள்ள பனிநீர் ''புன்னுனி மேனீர்போல் நிலையாமையென்றெண்ணி'' நாலடியார்-29. புனல்மேற்குமிழி-நீர்மேல் தோன்றும்குமிழி,

''நீரிற்குமிழியிளமை'' நீதிநெறி விளக்கம்-1. புட்கரத்தின்—வானத்தில், வில்லிடு வில்லும்—ஒளிசெய்கின்ற வானவில்லும் வானிடு வில்லின் வரவறியா வாய்மையால்,'' நாலடி-கடவுள் வாழ்த்து-1. மெய்யை-உடம்பை, பேதைதுணிவு-அறியாமையால் துணியும் துணிவு, சுகநெறி—பேரின்பவழி, செல்லிடும்—செல்கின்ற, சேவடி—செம்மையாகிய திருவடிகள்.

45. சேவடி யென்றன் சிரத்திலும் நான்சொலுஞ்
செந்தமிழின்
பாவடி தோறும் பதித்துவைத்தாயென்ன பாக்கியமோ
மாவடி வேந்தும் பலிபால் நடந்தொரு வாமனமாய்
மூவடி வாங்கும் நெடியோன்பின் வந்தருள் மொய்
குழலே.

இச்செய்யுள் கருணம்பிகையின் அருளனுபவம் கூறுவது. சிரம்—தலை, பாவடி—பாட்டிலுள்ள அடிகள், ''என் பாவடி யேட்டிலும் பட்டதன்றோ'' கந்தரலங்காரம்-15. என்ன பாக்கியமோ—என்ன நல்வினை செய்தேனே, மாவடிவுஏந்தும்-பெரிய உருவத்தைப் பெற்றிருக்கின்ற, பலிபால்—மாபலிச் சக்கரவர்த்தியினிடம், ஒருவாமனமாய்—ஒரு குறளுருவமாய், ''நீல நிறத்து நெடுந்தகைவந்தோர், ஆலமர் வித்தினருங் குறளானன்'' இராமவதாரம் பாலகாண்டம்—வேள்விப் படலம்-21. மூவடி மூன்றடிநிலம், வாங்கும்நெடியோன்—வாங்கிய நீண்டவடிவுடைய திருமால், ''அடியொரு மூன்று நீயளந்து கொள்கென, நெடியவன் குறியகை நீரினீட்டினன்'' ஷைவேள்வி-34. ''மாவலிபால் மூவடி கேட்டன்று'' கந்தரலங்காரம்-15. அம்பிகை திருமாலின் தங்கையாகலின், ''நெடியோன் பின்வந்தருள் மொய் குழல்'' என்றார். மொய்குழல்-அடர்ந்த கூந்தலையுடையவள், அன்மொழித் தொகைக் காரணப்பெயர்.

46. குழலிசை யாளிரை காத்தவ னுந்திருக் கோகனக
நிழலிசை வானுங் குறிக்குங் கருணை நிமலிசெம்பொற்
கழலிசை யாவென் கருத்தைத்திருத்திக் கடுநரகத்
தழலிசை யாமற் றடுத்தாள் கடைக்கட் டயவுவைத்தே.

குழலிசையாய்—வேய்ங் குழலினிசையால், நிரைகாத் தவன்—காட்டில் திரியும் பசுக்கூட்டங்களை தன்னிடம் வர வழைத்து, (கோவர்த்தன மலையினடியில் வருவித்து) ப்பாது காத்தவன் (திருமால்), திருநிழல் கோகனகம்-அழகும் குளிர்ச்சி யுமுடைய தாமரை மலரில் பொருந்தியிருப்பவன் பிரமன். குறிக்கும் — தியானிக்கின்ற, நிமலி — அம்பிகை, கழல் இசையாத — திருவடிகளிற்செல்லாத, என்கருத்து — என் எண்ணம், நரகத்தழல்—நரகத்தீ, இசையாமல்—பொருந் தாதபடி, கடைக்கண்ணால் பார்த்து அருள் செய்தலின். ''கடைக் கட்டயவு வைத்தே'' என்றார்.

47. வைத்தது மிங்கெனை வல்வினைக் கோவென்
மனத்திருந்து
பொய்த்தது மென்ன புதுமையதோ நினைப்
போரைமுன்னி
யுய்த்ததுஞ் சாதனை யோவறி யேன்சொலு
முன்செவிக்குத்
தைத்தது மில்லைகொல் லோகரு ணாலயத் தற்பரையே.

இங்கு—இப்பூமியில், வல்வினைக்கோ—வலியதீவினைகளைச் செய்தற்காகவோ, முன்பியற்றிய வலியதீவினை காரண மாகவோ, பொய்த்தது—நீஅருள்புரியாமல் பொய்யாக்கினது, என்ன புதுமை—என்ன ஆச்சரியம், உய்த்ததும்—முத்தியிற் செலுத்தியதும், சாதனையோ—பொய்யோ, தைத்ததும்— பட்டதும், இல்லைகொல் — இல்லையோ, கொல் என்னும் இடைச்சொல் ஐயப்பொருளுணர்த்தியது, ''கொல்லென்ப தசைச் சொலையம்'' சூடாமணி நிகண்டு, தற்பரை-அம்பிகை, தனக்குத்தானே பரமாயுள்ளவள், ஆன்மாவுக்கு மேலானவள்.

48. தற்பரை யுன்னிரு தாட்டா மரைக்குச் சரண்புகுந்தும்
சொற்பரைப் போயிதஞ் சொல்லவைத் தாயென்ன
சொல்லென்முக்கட்
சிற்பரை யேநற் சிவையே யிதுவுன் றிருச்செயலின்
கற்பனை யென்றிருந் தேன்றமி யேன்கரு ணாலயமே.

தாள்தாமரை — திருவடித்தாமரை மலர், உருவகம் சரண்புகுந்தும் — நீயேபுகலிடமென்று உன்னைவந்தடைந்தும், (என்னையாளாமல்) சொற்பரை — அற்பரிடம், வேற்றுமை மயக்கம், இதம் — (அவர் மகிழ்தற்குரிய) இனிமையான சொற்களை, என்ன சொல்வன் - (சரண்புகுந்த என்னையாளாமல் விட்டது குறித்து) யாது சொல்வேன், சிற்பரை—மேலான அறிவுவடிவமானவள், சிவை — நன்மை செய்பவள், சிவசக்தி, செயலின் கற்பனை - இன்மையையுண்மையாகவும் உண்மையை யின்மையாகவும் செய்யும் செயல்திறமை. இச்செயல் திறம் அகடித கடன சாமர்த்தியம் எனப் பெறும். இப்பாடலின் முன்னிரண்டடிகளுடன்.

ஐயனளந்த படியிரு நாழிகொண் டண்டமெல்லாம்
உய்ய வறஞ்செயு முன்னையும் போற்றி
யொருவர்தம்பாற்
செய்ய பசுந்தமிழ்ப் பாமாலை யுங்கொண்டு
சென்றுபொய்யும்
மெய்யுமியம் பவைத்தாயிது வோவுன்றன்
மெய்யருளே.

என்னும் அபிராமியந்தாதி-57 பாடல் ஒப்பிடுக.

49. மேகத்தை வென்ற குழலணங் கேபண்டு விண்பறந்த
காகத்தின் வைத்த கருணையி லோர்புன் கடுகிலொரு
பாகத்தை யென்கண்வைத் தாற்குறை யோபசும்
பான்மைமிகும்
பூகத்தை வெல்கந் தரக்கரு ணையப் பூங்கிளியே.

குழல்–கூந்தல், கூந்தலுக்கு மேகம் உவமை, ''மேகத்தை வென்ற குழல்'' என்றது எதிர் நிலையுவமை, ''எதிர் நிலையுவ மானந்தனக் கிகழ்ச்சி, யடையவுரைப் பதாமஃதைவகைத்தே'' அணியியல் விளக்கப்படலம். குவலயானந்த முடையார் இதனைப் பிரதீபகமென்பர், 'விண்ணேனு மேகங்கள் வெற்பேறி மறைபட, வெருட்டிய கருங்கூந்தலாய்,' தாயுமானவர்

பாடல்-943. ஒரு பாகம்-சிறுபகுதி, குறையோ-குறையன்று, பசும்பான்மை-பசுமைத்தன்மை, பூகம்-கமுகமரம், கந்தரம்-கழுத்து, பூகம்—கழுத்திற்குவமை, '' கந்தரம் கமுகு காட்ட, '' தந்திவனப்புராணம் '' பூகத்தை வெல்கந்தரம் '' என்பதும் பிரதீபகமாம். '' கொண்டலே வென்ற குழலியர் '' - 27. என்றதும் இவ்வணியேயாம். பூங்கிளி – அழகிய கிளி. உவமையாகு பெயர். நிறத்தினுலும் மொழியினுலும் கிளி அம்பிகைக்குவமையாயிற்று. இப்பாடல் குறித்ததல வரலாறு:- துருவாச முனிவர் கந்தமா புரியென்னும் திருமுருகன்பூண்டியில் காக பலியிட்ட சோற்றை ஒரு காகம் தன் இனத்துடன் உண்டு எஞ்சிய ஓர் அன்னத்தைத் தன் குஞ்சுக்கிரையூட்ட வாயிற் கௌவிக்கொண்டு புக்கொளியூர்க் கடை வீதி வழியே சென்றது. எதிர்ப்பட்ட மற்ருெரு காகம் அதனுடன் சண்டையிடவும் காகம் வாயைத் திறந்தது. அதனுல் வாயிலுள்ள சோறு நழுவிக் கண் தெரியாத சிவபக்தன் ஒருவனது பிச்சைப் பாத்திரத்தில் விழுந்தது. அதனையறியாத சிவபக்தன் தண்ணீர்ப் பந்தலொன்றையணுகிச் சோற்றையுண்டு மகிழ்ந்தான். சிவபக்தனுக்கு ஒரு சோறளித்த புண்ணிய பலத்தால் அக் காகம் அவிநாசியில் மரணமெய்திய போது தேவவிமானமேறிச் சிவலோக மெய்திச் சிவபெருமான் திருவருளுக் குரியதாகியது.

அவிநாசித் தல புராணம் காகச் சுருக்கம் காண்க.

'' வந்த நற்காக்கைக் கருள் செய்யக் கொளியில்
வளர்பெருங் கருணை நாயகியே. புக்கொளிமாலை-12.

**50.** கிளியா யிருக்கு மன்பருட் கூட்டிற் கிளர்ந்தசுடர்
ஒளியா யிருக்கு முனிவர்க்கும் யோகியர்க்
நோக்குபெரும்
வெளியா யிருக்கு மனமிறந் தோர்க்கு
மெய்ஞ்ஞானமெனும்
தெளியா யிருக்குங் கருணைப் பிராட்டி திருச்செயலே.

உள் கூடு—உள்ளமாகிய கூடு, உருவகம். ''சிவத்தோ, டண்மையதாய் மறைக் கூட்டினில் வாழுமருங் கிளியே'' எழுமாதைச் சர்வலோக நாயகி ஒருபா ஒருபஃது-7. கருணம்பிகையைக் கொஞ்சு மொழியினாலும் திருமேனி நிறத்தினாலும் கிளி என்றார். ஒளி—ஒளிப் பொருள்களுக்கெல்லாம் ஒளி செய்யும் மூல காரணமான பேரொளி. முனிவர்—துறந்தோர், யோகியர்—அட்டாங்கயோக முதல் தியான யோகம் ஈறான பத்து வகை யோகங்களைச் செய்வோர். வெளி—தத்துவங்களைக் கடந்து நிற்கின்றபர வெளி, வெளி—ஆகாயம், தெளி — ஒளி, தெளிவுமாம்.

51. செயலொன்று நானறி யேனறி யாமையிற் சிக்கியிங்கு
மயலொன் றி நின் று வருந்துகின் றேனிம வான்பயந்த
கயலொன் றியகட் கரும்பே கவலை கடக்கமருந்
தயலொன் றிலாம லடைந்தே னுனைக்கை யடையெனவே.

செயல் ஒன்றும்—செயதற்குரிய நற் செயல்களில் ஒன்றையேனும், மயல் ஒன்றி—உலக மயக்கத்தைப் பொருந்தி, இமவான்—இமயமலையரசன், கயல் ஒன்றிய கண்—கெண்டை மீனை ஒத்தகண், கரும்பே—கரும்பு போற் சுவை செய்பவளே, ''இனிய சுவைக் கரும்பே வருகவே'' பெருந்திருப்பிராட்டி பிள்ளைத் தமிழ், வருகை-10. 'மெய்ஞானக் கரும்பே வருகவே' மங்களாம்பிகை பிள்ளைத் தமிழ், வருகை-10. அயல் ஒன்றும் — வேறொன்றும், உனையடைந்தேன் –கவலை நோய் தீர்க்கும் மருந்தாகவுள்ள உன்னையடைந்தேன், ''தனக்குவமையில்லா தான்றாள் சேர்ந்தார்க்கல்லான், மனக்கவலை மாற்றலரிது, '' குறள். ''மாருப்பவ நோய் மாற்றுமலை மருந்தே வருக வருகவே'' காந்திமதியம்மை பிள்ளைத் தமிழ்-10. ''சித்தக் கவலைப் பிணிக்கோர் மருந்து'' கருவையந்தாதி.

52. அடையும் பிறவி யலைகடற் சூழலி லாழ்ந்தலுத்துச்
சடையுமென் னுருயிர் மேற்கடைக் கண்ணருள் சற்று
வைப்பாய்
மடையுஞ் சிவகங்கை வாவியில்வந்தண்ட வாணர்
தினங்
குடையுந்தென் காசிக் கருணாலயம்படர் கொற்றவையே

பிறவியலைகடல்—பிறவியென்னும் அலையையுடைய கடல் ''பிறவிப்பெருங்கடல்'' குறள், சூழல்—சுழல், முதல் நீண்டது, நீட்டல் விகாரம், ஆழ்ந்து அலுத்து —முழுகிச் சோர்வுற்று, சடையும்— கிலேசப்படுகின்ற, மடையும்— நீர் நிறைந்த, சிவகங்கைவாவி—சிவகங்கையாகிய தடாகம், ''கங்கையே சிவகங்கைத் தடாகமாகவும், காசிக்கங்கை என்னும் கிணருகவும், திருநள்ளாறு என்னும் நதியாகவும் விளங்குவதாகத் தலபுராணம் கூறுகின்றது. அண்டவாணர்-தேவர்கள் குடையும்—முழுகுகின்ற, தென்காசி—தெட்சண காசி, அம்பிகைக்கு வலப்பாகம் கொடுத்தலால் தெட்சண காசியாம் என்பர் படர்—படர்கின்ற, கருணாலயம்— கருணாலயம் என்னும் கோவில், படர்கொற்றவை—படர்ந்து (சென்று) வாசம் செய்கின்ற கொற்றவை.

53. கொற்றவை யேயென்றுங் கோமளை யேயென்றுங்
குஞ்சரத்தைப்
பெற்றவ ளேயென்றும் பெண்ணணங் கேயென்றும்
பேதையுயிர்க்
குற்றவ ளேயென்றும் மகிடாசுர னூழிவலி
செற்றவ ளேயென்றும் வாழ்த்துமெந்நாளுமென்
சித்தமதே.

கொற்றவை—வலிமையும் வெற்றியும் தருபவள், கோமளை—அழகும் இளமையுமுடையவள், குஞ்சரம்—யானை முகமுடைய விநாயகர், ''சிறுகட் பெருஞ்செவிக்குஞ்சரக் கன்றின்'' முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்-1, அணங்கு— தெய்வம், பேதை-அறியாமையுடையேன், உற்றவள்-பொருந்

திய துணையாயிருப்பவள், ஊழி—மிகுந்த ஆயுள், வலி—பலம், ஊழிவலி—உம்மைத் தொகை, செற்றவள் அழித்தவள், ''மகிடன்றலைமேல்சுந்தரி நீலி'' அபிராமியந்-6, சித்தம்—மனம், வாழ்த்தும்—துதிக்கும். சித்தத்தில் நினைத்த பின்னரே வாய் வாழ்த்துதலின் வாயின் தொழில் சித்தத்தின்மேலேற்றிக் கூறப்பட்டது. வாக்காகிய கருவியால் என் சித்தம் வாழ்த்து மெனினுமாம். ''பொற்கொன்றைத் தாமரைப் பேசுதியோர் தரம்பாவி நெஞ்சே'' மறைசையந்தாதி—3.

54. சித்தரு மாதவச் செல்வரும் நான்மறை தேர்பரம
முத்தரும் போத முனிவரும் செங்கை முகிழ்த்துமுடி
நித்தலுந் தாழும் நிமலி நின் பாதத்தில் நேசம்வைக்க
அத்தரு நீயுமல் லாலெனக் காருயிர்க் காதரவே.

சித்தர்—அணிமாமுதலிய எண்வகைச் சித்திகளைப் பெற்றவர், தவச்செல்வர்—தவம்புரிவோர், நான்மறை—இருக்கு யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களை, பரமமுத்தர்—மேலான சிவன்முத்தர் போதமுனிவர்—ஞானத் துறவிகள், முகிழ்த்து-கூப்பி, முடி-தலையில், தாழும்-வணங்குகின்ற, நிமலி-குற்றமற்றவளே, அண்மைவிளி இயல்பாயிற்று. நேசம்—அன்பு, அத்தர்—சிவபெருமான், எனக்கு உயிர்க்கு—எனது உயிர்க்கு, வேற்றுமை மயக்கம், ஆதரவு ஆர்—உதவி செய்வோர் வேறியாவர், ஒருவருமிலர், எனக்கு உயிர்க்கு ஆதரவு ஆர் எனக்கூட்டிப் பொருள் காண்க நிமலிநின் பதத்தில் (நான்) நேசம் வைக்க அத்தரும் நீயும் எனதாருயிர்க்குத் துணையாவீர் என்பதாம். அம்பிகையின் பாதத்தில் அன்பு வைத்தால் அம்பிகை சிவத்துடன் கூடி நின்றே அருள் செய்வாள். அம்பிகை சிவத்தினின்றும் பிரிக்கப்படாத அருட் சக்தியாகலின்,

''சிறக்குங் கமலத் திருவேநின் சேவடி சென்னிவைக்கத்
துறக்கந் தருநின் றுணைவரும் நீயும் ...... என் முன்னே
வரல்வேண்டும்''

என்னும் அபிராமியந்தாதி-89 பாடலடிகள் ஒப்பிட்டுக்காண்க.

55. தரவா வரமுந் தவமுமென் றேதினந் தாழ்ந்துருகிக்
கரவா துவந்தருள் நீபெற்றிடாமற் கனிந்தவரைப்
புரவாமல் நாளையெல் லாங்கழித் தாய்கொடும்
புன்பிறப்பில்
வரவா வுனக்குக் குறிப்பின்னம் பேதை மடநெஞ்சமே.

தவமும் வரமும் தரவா எனக்கூட்டுக. வரம்—தெய்வக் கொடை, கரவாதுஉவந்து அருள—அம்பிகை ஒளியாமல் மகிழ்ந்து கொடுக்கும் அருளை, ''கரவாது வந்தருள் கண்ணன் ஞர் கண்ணும்'' நாலடியார். கனிந்தவரை - அன்பினுல் உள்ளம் கனிந்த அடியார்களை, புரவாமல்—உணவுடைகளால் பாதுகாவாமல், வரவா—வருதற்கா, உனக்குக் குறிப்பு—உனக்கு எண்ணம்; அம்பிகை இசையெச்சம்.

56. நெஞ்சக் கரவும்பொல் லாமையும் பாவ நெறிகளுக்கு
மஞ்சிக்கொளாவடங் காமையும் புக்கொளி
யம்மையுன்ருள்
தஞ்சித் திடாத்தறு கண்மையும் நீங்கத் தயவுவையா
துஞ்சித்த மேயிருந் தாலென் று நாவிலி யுய்வதுவே.

கரவு - வஞ்சனை, பொல்லாமை—தீமை, அஞ்சிக்கொளா அஞ்சாத, அடங்காமை-மனவடக்கமில்லாமை, தஞ்சித்திடா—தஞ்சம்புகாத, தறுகண்மை குரூர குணம், உஞ்சித்தம்—உன் மனம், உய்வது என்று—பிழைப்பது எப்பொழுது.

57. உய்தவத் தோர்திரு நாவினும் வேதத்தினுச்சியினும்
மைதவிரானந்த வைதிகச் செந்தமிழ் வாணரன்பிற்
செய்தநற் பாவினுந் திண்புனற் காமச்
செருக்கனைத் துங்
கொய்தவர் நெஞ்சினு மாலய மாய்க்குடி கொண்டவளே.

இப்பாடல் அம்பிகைவிரும்பி வீற்றிருக்குமிடங் கூறியது.

மைதவிர் ஆனந்தம்--குற்றமற்ற பேரின்ப மகிழ்ச்சி, வைதிகம்—வேதநெறிப்பட்ட நல்லொழுக்கம், தமிழ்வாணர்—தமிழ்ப்புலவர் மூவர் முதலிகள் எனினுமாம், பா—பாடல்

வெண்பா அகவற்பா, கலிப்பா, வஞ்சிப்பா, தாழிசை துறைவிருத்தமென்ற பாவினங்களும் பாவினுள் அடங்கும், காமச்செருக்கு-காமக்களிப்பு, காமம் நீக்குதற்கரிய வலிமையும் ஊற்று நீர்போல மேலும் மேலும் பெருகுதலும் உடைமையால் அதனைத் திண்புனற் காமம் என்றார். கொய்தவர் இதனை ஒரு மொழியாகக் கொள்ளின் களைந்தவர் என்றும் தொடர் மொழியாகக் கொள்ளின் களைந்த தவத்தினர் எனவும் பொருள் தரும்.

''உய்தவத்தோர் நாமுதலியவற்றை ஆலயமாய்க் குடி கொண்டவளே'' என்றதனால் என்னுள்ளத்தையும் ஆலயமாய் குடிகொள்வாய் என்பது குறிப்புப் பொருளாம். இதுதொனி யென்னுமலங்காரமாம்.

58. கொண்டாலநஞ்சமு தாக்கிய கேள்வன் கொடுத்த கொன்றைந்
தண்டா ரணிசிவ சங்கரியேயின்னந் தானுமென்னைத்
திண்டா ரணியில் செலிக்கவிட்டாலுமுன் சேவடிக்குத்
தொண்டான தொண்டர்க்குத் தொண்டாய்ப் பணிசெய்யத் தோற்றிவையே.

ஆலநஞ்சு — ஆலகாலவிடம். கேள்வன் — சிவபெருமான். ''நஞ்சமமுதா மெங்கள் நாதரருணேசருக்கு'' அருணைக்கலம் பகம். தண்தார்—குளிர்ச்சியாகிய பூமாலை. இன்னம்—இனி மேலும். தொண்டான — சரியை கிரியை யோக ஞானமார்க் கங்களில் நின்று தொண்டு செய்பவரான, தொண்டர்க்கு — அடியார்களுக்கு, தொண்டாய் — அடிமையாயிருந்து, பணி — அவர் ஏவிய ஏவல்களை.

''தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே'' என்பராகலின்.

''தொண்டர்க்குத் தொண்டாய்ப்பணி செய்யத் தோற்றி வையே'' என்றார். இது ஆர்வமொழியென்னு மலங்கார மாம்.

"வேறிலையென்றுன்னடியாரிற் கூடி, விளங்குநின்பேர்
கூறலையானுங் குறித்து நின்றேன்"

சரசுவதியந்தாதி - 22.

"அன்பர்பணி செய்ய வெனையாளாக்கி விட்டனையேல்
இன்பநிலைதானே வந்தெய்தும் பராபரமே."

தாயுமானவர்பாடல்.

"மெய்த்தவ ரடிக்குற் றேவலின் றிறத்தும் விளங்குமாகம
வுணர்ச்சியினும்
புத்தலர் கொடு நிற்பரவு பூசையினும் பொழுது
போக்கெனக்கருள் புரிவாய்"

சோணசைலமாலை — 29.

என்பவற்றாலும் அடியார்க்குப் பணிசெய்தலின் சிறப்பு விளங்குவதாகும்.

59. தோற்றுஞ் சுடரு மதியிய மானனுஞ் சூழ்ந்தெறியுங்
காற்றும் புனல்கனல் வானிலன் யாவுங் கலந்தெவரும்
போற்றும் பெருங்கரு ணாலயச் செல்வி
புகழையென்றுஞ்
சாற்றுங் கருத்துடை யார்படை யாத தனமிலையே.

சூரியன் முதலாகிய எண்வகை வடிவாய் விளங்குகின்ற கருணாம்பிகையின் புகழைச் சொல்லவிரும்புவோர் எல்லாச் செல்வங்களையும் பெறுவர் என்பது இப்பாடலின் கருத்து.

சுடர் — சூரியன், மதி — சந்திரன், இயமானன் — உயிர், காற்று, புனல் — நீர், கனல் — நெருப்பு, வான் — ஆகாயம், நிலன் — பூமி.

"இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமான னாயெறியுங் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாசமா யட்ட மூர்த்தியாகி"

திருநாவுக்கரசர் நின்ற திருத்தாண்டகம் — 1.

கீழ்வருவனவற்றைப் பின்னிரண்டடிகளுடன் ஒப்பிட்டுக் காண்க.

'' சேருந்தலைவி சிவகாம சுந்தரி சீறடிக்கே
சாருந் தவமுடையபார் படையாத தனமில்லையே ''
அபிராமியந்தாதி — 68.

'' சீதாம் புயத்தி விருப்பா ளிருப்பவென் சிந்தையுள்ளே
ஏதாம் புவியிற் பெறலரி தாவதெனக் கினியே '' கம்பர்
சரசுவந்தாதி — 7.

60. இல்லாமை யிற்புல்லர் பாற்சென் று நிற்றலு
மேழைமையும்
கல்லாமை யுங்கடுந் துன்பமு நோயுங் கவலைமுத
லெல்லாந்தென் புக்கொளியெம்பெரு மாட்டி
யெதிருருகி
நில்லா தவரையன் றேசென்மந்தோறு நெருக்கிடுமே.

இல்லாமை — வறுமை, புல்லர் — அற்பர், ஏழமை — அறிவின்மை, நெருக்கிடும் — வருத்தும்.

'' இல்லாமை சொல்லி யொருவர்தம் பாற்சென்றிழிவுபட்டு
நில்லாமைநெஞ்சி னினைகுவரேனித்த நீடுதவங்
கல்லாமை கற்ற கயவர்தம் பாலொரு காலத்திலும்
செல்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே
என்பது அபிராமியந்தாதி — 54

61. நெருக்கும் பொறியவித் தம்பையை நெஞ்சம்
நினைத்திருந்தா
லுருக்குங் கருத்தை யுலைமெழுகாக்கி யுடல்புளகங்
குருக்கும் பரவசங் கூட்டிடு மோடிக் குலாவுளத்தைச்
சுருக்கும் பெருக்கும் பரப்பிரும ஞான சுகானந்தமே.

நெருக்கும் — வருத்துகின்ற, ஐம்பொறியவித்து — ஐம்பொறிகளின் சேட்டையைக்கெடுத்து, அம்பையை — கருணாம்பிகையை, உலைமெழுகாக்கி - உலையிலிட்ட மெழுகுபோலாக்கி '' உலையிடு மெழுகதென்னவுருகியே '' (கந்த — வள்ளியம்

திருமணம்) புளகம் குருக்கும்—மெய்மயிர் சிலிர்த்தல், அரும்பும் (தோன்றும்), பரவசம் — தன்வயமறுதலே, கூட்டிடும் — சேர்க்கும், ஓடிக்குலாவு உளம் — ஐம்புல விஷயங்களில் ஓடித் திரிகின்ற உள்ளம், சுருக்கும் — ஒடுக்கும், பரப்பிரமஞானம்— மேலான பிரமத்தை யறிகின்ற அறிவினுல் உண்டாகும், சுகானந்தம் — சுகரூபமான மகிழ்ச்சி, பெருக்கும் — பெருகச் செய்யும்.

கருணும்பிகையை உள்ளத்தில் நினேப்போருக்குண்டாகும் இன்பானுபவம் கூறியதிச் செய்யுள்.

'' விரும்பித் தொழுமடியார் விழிநீர்மல்கி மெய்புளகம்
அரும்பித் ததும்பிய வானந்தமாகி யறிவிழந்து
சுரும்பிற்களித்து மொழிதடு மாறிமுன் சென்னவெல்லாம்
தரும்பித்த ராவரென்ருல பிராமிசமய நன்றே
அபிராமியந்தாதி – 94

'' அன்பின ரிரப்பதினிரட்டி யருள்செய்யும், நின்பத தருத்துணர்நிறைந்
தொளிர்வனப்பாம், இன்பமுறு தேன்மு முகுமென்னி தயவண்டின்
தன்புளக மெய்க்களிதழைப்பவருள் தாயே.
சௌந்தரியலகரி — 92

62. ஆனந்த வாரண வாசிப்பெருங்கரு ணுலயமென்
ஈனந் தவாமனத் தேபுகுந் தாளிதற் கீடிவியோர்
தானந் தவமும் பிறிதில்லேச் சஞ்சலஞ் சார்பிறவிக்
கானந்தனுலும் பயமில்லே யெந்தன் கருத்தினுக்கே.

ஆனந்தம் — மகிழ்ச்சி, வாரணவாசி — அவிநாசி, பெருங் கருணுலயம் — பெருங்கருணேயம்மன், ஈனம்தவா — இழிவு நீங்காத, இதற்கு ஈடு — இங்ஙனம் புகுந்ததற்குச் சமம், பிறவிக்கானம் — பிறவியாகிய காடு, உருவகம்.

காட்டில் மிருகங்களின் துன்பங்கள் உண்டாவதுபோலப் பிறவியல் ஐம்புலன்களின் துன்பங்கள் உண்டாவதால் பிறவியைக்கானமென்ருர்.

'' அரும்பெற லொருவநின்றிரு வடிபரவுதும்
ஐம்புல விலங்கு வெம்பட ருறுத்து
மானுப் பிறவிக் கானங்கடந்து
கருதருமின் முத்திப்
பொருவின்மா நகரம் புகுதரற் பொருட்டே.

சீகாளத்திப் புராணம் - பொன்முகரிச் சருக்கம் - 15

63. கருத்திற் கருணை மணிவிளக் கைமனக் கட்டிரியிற்
பொருத்தித் திரோத விருள்நீக்க வுள்ளம் புறமசையா
திருத்தித் தியானித் திராப்பகலின் றி யிருந்தவர்க்குப்
பருத்திப் பொதிக்கன லிட்டது வாஞ்செய்த பாவங்களே.

கருத்தின் — உயிர்கள் உய்யவேண்டுமென்னும் கருத்தினை யுடைய, கருணை — கருணம்பிகையென்னும், மணிவிளக்கை— அழகிய ஒளியை, மனக்கண் திரியில் — மனக்கண்ணுகிய திரியில், உருவகம். திரோத விருள் — மறைப்பாகிய இருளை, நீக்க — நீக்குதற்கு, புறம் அசையாது — புறத்திற்செல்லாமல், தியானித்து — நினைத்து, இராப்பகல் இன்றி — இரவும் பகலு மில்லாமல், இருந்தவர்க்கு — துரியாதீதத்தில் இருந்தவர் களுக்கு. '' இரவுபகலில்லாத பேரின்ப வீட்டினிலிருந்து துயில் கொண்மினென்று'' ''இரவு பகலற்றவிடத்தே காந்தயோகம், வரவுந்திருக் கருணைவையாய் பர்ாபரமே'' தாயுமானவர் பாடல். பருத்திப்பொதி—பருத்திமூட்டை, அனல்—நெருப்பு, ஆம் — ஒப்பாகும், ''பரசமயப் பஞ்சுக்கனலின் பொறிபர காலன்பனுவல்களே'' பெரிய திருமொழிச் சிறப்புப்பாயிரம்.

நெஞ்ச மா துமை நேசனை நண்ணுமேல்
விஞ்சு பாதகங் கோடிவிளைப்பினும்
அஞ்சு ருனவனவ் வினையாவையும்
பஞ்சு தீயிடைப் பட்டெனமாயுமே''

பிரபுலிங்க லீலை சாதகங்காகதி — 13

64. பாவிக்கச் சிந்தனை தந்தாள் தனையென்றும் பாடத் தந்தாள்
நாவைக் கசிந்து நறுமலர் தூவித்தன் னற்பதந்தைச்
சேவிக்கப் பூசிக்கச் செங்கை தந்தாள் கல்விச் செல்வந் தந்தாள்
ஆவிக் கினிய கருணைப் பிராட்டி யடியனுக்கே.

பாவிக்க — தன்னைப் பாவனை செய்வதற்கு, ''தானும் அதுவாகப் பாவித்து'' நல்வழி. சிந்தனை — எண்ணம். சிந்தித்தற்குரிய மனமெனினுமாம், பாட நாவைத் தந்தாள் எனக் கூட்டுக. சேவிக்க — தொழுதற்கும், பூசிக்க — மலர் தூவிப் பூசை செய்தற்கும், தன் புகழையறிதற்குக் கல்விச் செல்வம் தந்தாள் என்க.

''வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்தவாவினையே னெடுங்காலமே.
திருநாவுக்கரசர் திருக்குறுந்தொகை — 7 நோக்குக

65. அடியே னலனின் னெதிர்நின் றிருகங்க ளானந்தநீர்
வடியே னகஞ்சற்று மாற்றறி யேனன்பர் வாய்மை கடைப்
பிடியேன் கருணைப் பெருவெள்ள மேயிங்கு வேதலிக்குங்
கொடியேன் றனையுமென் றோவம்மை நீயருள் கூட்டுவதே

அடியேன் அலன் — நினக்கு அடித்தொண்டு செய்வே னல்லேன், அகம் — மனம், மாற்று — மாறுதல், வாய்மை — உண்மையுரைகளை, பேதலிக்கும் — மாறுபட்ட, அருள் கூட்டுவது — நின் திருவருளில் சேர்ப்பது, என்றோ — எப்பொழுதோ, ஓ எதிர்மறை குறித்தது. ஐயம் எனினுமாம். உன் திருவருளைப் பெறுதற்குரியவற்றுள் ஒன்றுஞ் செய்யாத வெனக்கு நீயருள் செய்வதெப்பொழுது. என்பதாம் ''என்னையெந்நாள் வந்திரட்சிப்பையே'' கந்தரலங்காரம் — 32.

௬௮. கூட்டமிட் டீமலர் தோறுஞ்செந் தேன்கொண்டு
கூட்டுதல்போற்
பாட்டி னமைப்பா லுறு நுண்பொருள்களும்
பான்மையுமே
பூட்டிவைத் தாய்ந்த தமிழ்ப்பாவை யீவற்ற
புல்லர்செவிக்
கூட்டவைத் தாய்புக் கொளியூர்க் கருணை
யுமையவளே

கூட்டமிட்ட ஈ — கூட்டமிட்டீ எனவாகியது, அகரம் தொகுத்தல் விகாரம். ஈ—தேனீ, வண்டு, அமைப்பால் உறு — அமைப்பினால் பொருந்திய, பான்மை—தன்மை, செறிவு தெளிவு முதலாகிய பத்துத் தன்மைகள், தண்டி-பொது-14, பூட்டிவைத்து — சேர்த்துவைத்து, ஈவு அற்ற புல்லர் — உலோபர், ஊட்ட வைத்தாய் — விருந்தாக உண்பிக்கும்படி செய்தாய், ஊட்ட என்றமையால் தமிழ்ப்பாவை விருந்து என்க.

இப்பாடலுடன் கீழ்வரும் பாடலடிகள் நோக்குக.

'' பூத்தொறு மவாவிச் செல்லும் பொறிச்சிறை
மணிவண்டொத்தான் ''
— கம்பர் — இராமவதாரம்

'' உய்த்தீட்டுந் தேனீக்கரி '' — நாலடியார்

'' கூடலிறைய்ந்த வொண்டீந்தமிழ் '' — திருக்கோவையார்

'' மலர்தொறுஞ் சென்று நிலவிய மதுவின்
துளிக்கணந்தொகுக்கு மளிக்கணம் பொருவ
நூல்பல வற்றிற் சால்புறக் குழுமிய
சொன்னயம் பொருணயந் தொடைநலமாதி
எந்நயங்களுமமைந்தினிமை தோன்ற
... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ...
புலவர் கூட்டுனும் புத்தமுதாக
உதயணன் சரிதையோதினர் '' கொங்குவேள்
மாக்கதை முகவுரை

'' வித்தந்தியாக முதவாவுலோபர்க்கு வீணிற் சொற்
பாட்டைத்தந்து '' — மறைசையந்தாதி

67\. உமையாளை யன்பர்க் குயிரை நந்தாத
ஒளிவிளக்கை
இமையா சலமடப் பாவையை நான்கண்டிறைஞ்சவவ
ளெமையாளிற் கொண்டத னுற்பிறப்பூடங்
கெளைப்படைக்க
வமையா திரிமலர் மேல்வீற்றிருக்கு மயனுக்குமே.

இறைஞ்ச — வணங்க, ஆளில் — அடிமையாக, பிறப்பூடு — எழுவகைப் பிறப்பில், ''கருணாம்பிகை என்னை யடிமை யாக்கிக்கொண்டதனால் பிரமன் என்னைப் பிறப்பிற் செலுத்த முடியாது'' என்பது கருத்து.

68\. அயத்தைப் புடமிட் டாடக மாக்குநி னன்மையருள்
நயத்தை யொருதினையத்தனை பாவித்து ஞானசிவ
மயத்தை யடைந்துயிர் வாழச்செய் வாரணை
வாசிப்பிரான்
புயத்தை மருவுமயிலே கருணையம் பொற்கொடியே

அயம் — இரும்பு, புடமிட்டு — தூய்மைப்படுத்தி, ஆடகம் — பொன், அருள் நயம் — உயிரின் மலங்களைப் போக்கித் தூய்மை செய்தலாகிய அருளினிமை, '' தாக்க வேதகத்திரும் பாக்கமுற்ற பொன்னென, நீக்கமற்ற விருண்மல வீக்கமற்று விட்டதே'' திருவிளையாடற் புராணம் — அட்டமாசித்தி — 17 தினையத்தனை — தினையளவு, தினைத்துணை நன்றி'' குறள் தினைத்தனையுள்ளதோர் பூவினிற்றேனுண்ணாதே'' திருவாசகம், பாவித்து — நினைத்து, ஞானசிவமயம் — அறிவு வடிவாகிய சிவத்தின் தன்மை, பிரான் — பெருமாள், மயிலே — மயில்போலுஞ் சாயலுடையவளே, ''விடையேறு மெம்பிரான் மனதுக்கிசைந்த மயிலே'' தாயுமானவர் பாடல்.

69\. பொன்னே சடிலப் புராந்தகன் பாகம் பொலிந்திலங்கும்
மின்னே கருணை விளைவே புராதன வேதங்கட்கு
முன்னே புவன பகிரண்ட கோடி முழுதும்பெற்ற
வன்னேயென் னுருயிருன்னிருதாளுக் கடைக்கலமே.

பொன்னே — கிளிச்சிறை என்னும் பசும்பொன் நிறத்தை யுடையவளே, ஆடகம் கிளிச்சிறை சாதரூபம் சாம்பூநதம் எனப்பொன் நான்கு வகைப்படும். அவற்றுள் கிளிச்சிறை — கிளிச்சிறகின் நிறமுடையது. '' மாற்றிலாப் பசுமை யொளிபழுந்த பொன்னே'', சௌந்தரியலகரி-67. சடிலம்— சடை, புராந்தகன் — சிவபெருமான், மின் — மின்னற்கொடி போன்றவள், '' மின்னுயிரமொரு மெய்வடிவாகி விளங்கு கின்ற, தன்னுளகமகிழானந்தவல்லி '' அபிராமியந்தாதி, புராதனம் — பழமை, முன்னே — முன்பு தோன்றியவளே. '' வேதமாதா '' என்பது தேவியின் திருநாமங்களில் ஒன்று. புவனம் — பூமி, பகிரண்டகோடி — வெளியிலுள்ள கோடிக் கணக்கான உலகங்கள். அன்னே- தாயே '' அகிலாண்டகோடி யீன்ற, அன்னையே பின்னையுங்கன்னியென மறைபேசுமானந்த ரூபமயிலே '' தாயுமானவர் - 941. அடைக்கலம் — சரணம் புகுதல், தஞ்சம் — அம்பிகை வழிபாட்டில் சரண்புகுதல் முக்கியமானது.

**70.** அடையார் பகையு முடிமன்னர் சீற்றமு மாணவத்தை
உடையா ரியற்றிடுங் கோள்களு நாள்களு மூழ்வினையும்
விடையார்தென் புக்கொளி யார்வலப் பால்வளர்
மின்னைவென்ற
இடையார் திருவருள் பெற்றிருப்போரை வந்தென்
செயுமே

அடையார் — பகைவர், சீற்றம் — கோபம், ஆணவம் — அகங்காரம், கோள் — இடையூறு, நாள்கள் — தீய நட்சத் திரங்கள், ஊழ்வினை — பழவினை, மின் — மின்னற்கொடி, இது மகளிர் இடைக்கு உவமை. அம்பிகையின் இடை மின்னலினும் சிறந்ததாகலின் மின்னைவென்ற இடையார் என்றார். எதிர்நிலையுவமையணி

**71.** செய்யவென் பொன்னருள் மாறுதெனக்கநல்
செந்தமிழா
லையமில் கேள்வி யருங்கவி மாலையை யாய்ந்தெடுத்துக்
கையணி செய்தும்பர் வேய்ந்த மந்தாரங்
கமழ்ந்ததிருத்
துய்ய பசுங்கிளைத் தோளினுந் தாளினுஞ் சூடவுமே.

சூட்டவும் — பி. ம். தேவர்கள் சூட்டிய மந்தார மலர் மாலையணிந்த நின் தோளிலும் தாளிலும் என் செந்தமிழ்க் கவிமாலையை சூட்டுதற்கு நீ அருள்புரிவாய் என்பது கருத்து.

செய்ய — செம்மையாகிய, நல்ல, பொன்னருள் — அழகிய அருளை, எனக்கருள் — எனக்குக் கொடுப்பாய், உம்பர் ஆய்ந்தெடுத்துக் கையணி செய்து வேய்ந்த மந்தாரங்கமழ் தோளினும் தாளினும் அருங்கவிமாலையைச்சூட உன் பொன்னருளை மாறுதெனக்கருள் எனக் கூட்டுக. உம்பர் — தேவர்கள், ஆய்ந்தெடுத்து — நல்ல மலர்களைத் தெரிந்தெடுத்து, கைஅணிசெய்து — கைகளில் அழகாகப் புனைந்து, வேய்ந்த — சூட்டிய, மந்தாரம் — மந்தார மலர்மாலை, ஆகுபெயர் தூய்ய — தூய்மையாகிய, பசுங்கிளைத்தோள் — பசுமையாகிய மூங்கில் போன்ற தோள், ''வேயுறுதோளிபங்கள், அமையுறு தோளியர்'' என்பன காண்க. மந்தாரம், தேவலோகத்தி லுள்ள ஐந்தருவினுளொன்று. தெய்வத்தின் தோளிலும் தாளிலும் மாலை சூட்டுதலாகிய மரபு தெரிகின்றது.

72\. சூடகப் பங்கயச் செங்கைமின் னேதமிழ்த்
தோற்றமில்லா
மூடரைச் சேர முயக்கிவைத்தாலு முருந்துநகை
ஆடகப்பூங்கொடி யேயென்றன் பந்ததி யாதெனிலுன்
பாடகச் சீறடிப் போதையெக் காலமும் பன்னுவதே.

சூடகம் — வளையல், பங்கயச்செங்கை — தாமரை மலர் போலச் சிவப்பான கை, மின்னே — மின்னற்கொடி போன்ற வளே, தமிழ்த்தோற்றம் — தமிழ் நூல்களின் காட்சி, தமிழ் நூலறிவின் உதயம், முயக்கி — கூட்டி, முருந்துநகை — மயிலிறகினடி போன்ற பல், ''முருந்துறழ் மூரலார்தம்'' நைடதம், ஆடகம் - பொன், பந்ததி - முறை, ''பரமாகம பந்ததியே'' அபிராமியந்தாதி - 6. பாடகம் — சிலம்பு, பன்னுவது — சொல்லுவது

73. பன்னவொட் டாருட் பரியவொட்டாருள்ள பாவனையா
ஒன்னவொட்டார்நின் றுருகவொட்டாரைவ ருன்னைத்
தஞ்ச
மென்னவொட்டாரென்ன செய்வேன் வன்றொண்டர்க்
கெதிர்கொடுபோய்
அன்னமிட்டாளு மணங்கே பெருங்கருணாலயமே.

ஐவர் — என்னுடைய ஐம்பொறிகளாயுள்ளவர், பன்ன வொட்டார் — உன்னைத் துதிக்க விடார், உன்ன — நினைக்க, தஞ்சமென்ன — அடைக்கலமென்று சொல்ல, "ஓரவொட்டா ரொன்றை யுன்னவொட்டார் மலரிட்டுனதாள், சேரவொட் டாரைவர் செய்வதென்" கந்தரலங்காரம்.

வன்தொண்டர்க்கு — சுந்தரருக்கு, எதிர்கொடு — எதிர் கொண்டு, அணங்கே — தெய்வமே, சுந்தரர் திருமுருகன் பூண்டியிலிருந்து மிகவும் பசியுடையவராய் வருவதையறிந்த அவிநாசிப்பெருமான் கட்டமுதுங் கங்கை நீருங் கொண்டு எதிர்சென்று சுந்தரரை அடியார் கூட்டத்துடன் உண்ணச் செய்து அவருக்கு அவிநாசி செல்லும் வழியையும் உரைத் தருளினர் என்பது தலபுராண வரலாறு.

"குறைந்த புன்மதியினேற்குக் கொணர்ந்த முதளித்தாய்
போற்றி
யுறைந்தபுக்கொளி சென்றேறவுயர் நெறியுரைத்தாய்
போற்றி
அவிநாசிப்புராணம் சுந்தரச் சருக்கம் - 27.

74. ஆலையிலேறுங் கரும்பெனச் சிற்றிடை யார்மயலின்
மாலையுங் காலையும் வாய்மெலிந் தேன்றுன்பமாற்று
கண்டாய்
பாலையு ஞானப் பாலையுஞ் சம்பந்தர் பாலளித்த
வேலையுஞ் சேலையும் வென்ற விலோசன மெல்லியலே.

ஆலையிலேறுங்கரும்பு — கரும்பாலையிலேறிய கரும்பு, "கரும்புபோல் கொல்லப்பயன்படுங்கீழ்" குறள். "எந்திரங் கூறுகாட்டிய கழையமுங்கக் கோறலும் சாறுகாட்டியதரோ"

கந்தபுராணம். திருநாட்டுப்படலம்-32. ''ஆலைவாய்க் கரும்பு வேலைவாய்த் துரும்பு வலைவாய்ப்புகுமொருமானெனத் தியங்கி'' புலவ ராற்றுப்படை 230. காலையும் மாலையும் எனக் கூட்டுக.

காலை காமம் தோன்றுதற்குரிய காலம், மாலை முதிர்ந்த காமம் விரிதற்குரிய காலம், ''காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந்நோய்'' குறள். அம்பிகை சம்பந்தருக்கு முலைப்பாலுடன் ஞானப்பாலையும் குழைத்து ஊட்டினராகலின்'' பாலையும் ஞானப்பாலையும் சம்பந்தர் பாலளித்த என்றனர். முலைப்பால் பசி தீர்தற்கும் ஞானப் பால் கவி பாடுதற்குமாம். ''பொய்கைக்கரையினியற் பாவான் மொழிஞானப் பாலுண்டு'' நால்வர் நான்மணி மாலை-1 ''வருணநன்குறுகவுணியன் சிறுமதலையம் புயல் பருகியே, பொருணயம் பெறுகவிதை வென்றெரு புனிதமாரி பொழிந்ததே'' சௌந்தரியலகரி-74.

வேலை – வேற்படையை, 'கடல் எனினுமாம் கடலினும் பெரிய கண்கள்,' கம்பர், சேலை–கெண்டைமீனை, விலோசனம்-கண்கள், மெல்லியல் — மென்மையான சாயலுடையவள். இப்பாடலில் உவமையணியும் எதிர்நிலையணியும் காண்க.

**75.** மெல்லிய நூபுரப் பாதத்தை யுன்னிவாய் விம்மிவிம்மிப்
புல்லிய பாசம் பொடியாக்கி மெய்யன்பு பூண்டுதமிழ்ச்
சொல்லியென் கட்புன லாறுய்ப் பெருகித் தொழக்
கரும்பு
வல்லியை வென்றமின் னேயிதே னெஞ்சினை
வேண்டுவதே

நூபுரம் — சிலம்பு, உன்னி — நினைத்து, வாய்விம்மி – வாயினால் தேம்பியழுது, விம்மிவிம்மி — அடுக்குத்தொடர் புல்லிய — ஆன்மாவை பற்றிய, பாசம் — ஆணவம், கன்மம், மாயை என்பன. கட்புனல் - கண்ணீர், விம்முதலும் கட்புனல் பெருகுதலும் அன்பின் மெய்ப்பாடுகளாம். தொழ — தொழ வேண்டும்; வியங்கோள்வினைமுற்று. கரும்பு — மகளிரின்

சொல்லுக்கும், வல்லி — பூங்கொடி இடைக்கும் உவமை கூறுவர். அம்பிகையின் சொல்லும் இடையும் இவ்வுவமை களினும் சிறந்து விளங்குகின்றன. இது இவ்வாறு தொழுத லாகிய இதனையே என்நெஞ்சு வேண்டுவது இதுவும் எதிர்நிலை யுவமையாம்.

76. வேண்டப் படும்பொருள் நீயறி யாதல்ல வின்னவருங்
காண்டற் கரிய கருணைமின் னேயிந்தக் காயமிங்கு
மாண்டற் கிருப்பினும் மாயப் பிரபஞ்ச வாரிதியைத்
தாண்டற் கிருப்பினும் நானறியேன் மற்றோர்
தஞ்சமுமே

வேண்டப்படும்பொருள் — என்றால் விரும்பப்படும் பொருள், நீ அறியாததல்ல — நீ அறியாததல்ல, நீ யறிந்ததே, இந்தக்காயம் — இந்த உடம்பு, மாண்டற்கு — அழிதற்கு, மாயம் — பொய்மை, பிரபஞ்சம் — உலக வாழ்வாகிய, வாரிதியை — கடலை, தாண்டற்கு — கடத்தற்கு நான் உலக வாழ்வில் அழிதற்கிருந்தாலும் உலக வாழ்வைக் கடப்பதற்கிருந்தாலும் உன் திருவடியே எனக்குத் தஞ்ச மாவதாம். வேறோர் புகலிடமறியேன் என்றபடியாம்.

77. தஞ்சத் துனதுபொற்றாளிணை யாந்தெய்வத்
தாமரைக்கென்
நெஞ்சைக் கொடுவந்து பூட்டிப் பொன்மாய்கையில்
நேசம்வைக்கும்
பஞ்சப் புலன்களைப் பாராமலுனருள் பார்த்திடவோர்
விஞ்சைக் குளிகை தருவாய் கருணை விளங்கிழையே.

பொன்மாய்கை — பொன்முதலிய அழிதலையுடைய பொருள்கள். பொன் என்ற ஒரு மொழி மண், பெண் என்ற பொருள்களையும் உடன் கொள்ளநின்றது 'ஒரு மொழியொழி தன்னினங்கொளற்குரித்தே '' நன்னூல், பஞ்சப் புலன்கள் — ஐம்புலன்களை, விஞ்சைக்குளிகை — மந்திரமாத்திரை, விளங் கிழை — விளங்குகின்ற ஆபரணமணிந்தவள், அன்மொழித் தொகை. '' விளங்கிழைபகிர்ந்த மெய்யுடை முக்கட்காரணன்'' நால்வர்நான்மணிமாலை.

78. விளங்கு மறைச்சிறு பாலனைச் சுந்தரர் வேண்ட
முன்னாட்
குளங்கொள் கராவிடைத்தந்த பொன்னேயன்பு
கூர்ந்தவர்தா
முளங்கொ ளுனதருட் பார்வைக்கு மீறின
தோவென்மனக்
களங்க மதுகரு ணும்பிகை யீதென்சொல் காரணமே

சிறுபாலனை — முதலையுண்ட சிறு பிள்ளையை, சுந்தரர் வேண்ட — ''புக்கொளியூரவிநாசியே, கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே'' என்று சுந்தரர் விரும்பிப் பாடவும், கராவிடை அம்முதலையினிடமிருந்து, அழைத்த பொன்னே – வரவழைத்துத் தந்த பொன்போன்ற அம்பிகையே ''எத்திறம் நின்ருனீசன் அத்திறம் அவளும் நிற்கும்'' ஆகலின் முதலைவாய்ப் பிள்ளையழைத்ததைக் கருணும்பிகை மேலேற்றிக்கூறினர்.

'' சாமி சுந்தரனர் பாடலுக்கிரங்கித் தானவர்
முதலைவாய்ப்பிள்ளை
பூமியந் தரரூரிருப்பவரறியப் பிள்ளையை யழைத்த
காரணியே ''
— புக்கொளிமாலை — 73

''திதலைவாய்த்தொளிர் கொங்கைத் திருப்பரவை காதலனர்
முதலைவாய்ப்பிள்ளை தந்த முதியவவிநாசிமுல்லை.
— வெஞ்சமாக்கூடற் புராணம் —
திருநாட்டுப் படலம் - 69

'' புக்கொளியூர் தனிற்புகுந்து மூவாண்டின் முனமுதலை
புசித்தபாலன்
ஒக்கவய தறிவுகொடுவருக வருளெனப்பாடி யுற்றவன்மீன்
கக்கமகிழ்ந் தரியமலை நாடுசென்று மகோதை தனிற்
காவல்வேந்தன்
ஒக்கவிருந்தந் நாட்டுப்பல தளிகண்ட கமகிழ்ந்தே
யோங்கிவாழ்நாள் ''
— ஷை வெஞ்சமாக்கூடற் புராணம்
ஆளுடையநம்பி படலம் – 41

" மூவாண்டுசென்ற முதலேதன் வாய்ப்பிள்ளை முன்னழைத்து
வாவாவென் ஞேதிய சுந்தரர் வாழ்கொங்கு மண்டலமே.

— வாலசுந்தரக் கவிராயர்
கொங்குமண்டல சதகம் - 19

79. காரணதாண்டவி யாவையுங் காக்கக்கங் காநதிசூழ்
வாரணை வாசியி லெண்ணுன் கறமுன் வளர்த்தவன்ன
பூரணி நீயெனைப் பெற்றவளாகியும் புன்பிறப்பிற்
கோரணி நான்கொள்ள லாமோவி தென்னென்று
கூறுவதே.

காரணதாண்டவி — ஐந்தொழிற்கும் மூலகாரணமாகிய ஆனந்த தாண்டவத்தைச் செய்தவள். தாண்டவம் — நிருத்தம். " ஆடலம்பிகை " என்பது சௌந்தரியலகரி. சிவன் தனித்து ஆடுவது சிவதாண்டவம், சக்தி தனித்தாடுவது சக்தி தாண்டவம். இதனை லாஸ்யம் என்பர். இருவரும் இணைந்து ஆடுவது எல்லியம் எனப்பெறும். " கூத்தனும் கூத்தியும் கோத்த கூத்துருவம், எல்லியத் தோரிழையென் மனுர் புலவர் " கூத்தநூல் — தொகை - 92.
தாண்டவம் எழுவகைக் கூத்து வகைகளில் ஒன்று.

" அரிய திருத்தாண் டவநிருத்த நாட்டியம்
குரவைவரி கோலம்வகைக் கூத்தேழ் — பரவுமிது
சாந்தி விநோதம் வகைக்கூத் தெனமூன்ரு
ஓர்ந்துணர்ந் தோராய்ந்தவுரை "

— பஞ்சமரபு நிருத்தம் - 2

கங்காநதி கங்கையாறு, வாரணவாசி — காசி, எண்ணுன் அறம் — முப்பத்திரண்டு அறங்கள், காசியில் விளங்கும் விசாலாட்சியம்மனுக்கு அன்னபூரணியென்று பெயர். அவளே அவிநாசியில் கருணம்பிகையாய் விளங்குகின்றவள். ஆதலின் " அன்னபூரணி " என்ருர்.

புன்பிறப்பில் — இழிவாகிய பிறப்பில் பிறந்து, கோரணி — இழிவை (பழிப்பு) " கோரணியைக் கண்டு மனங்கொள் ளாமல் " தாயுமானவர் மடல் - 2.

இது — நீ என் தாயாயிருந்தும் நான் பிறப்பில் இழிவை யடைவதாகிய இதனை,

**80.** கூறுஞ்சொலெந்தனை யுர்படிறேமனங் கொண்டுதினந்
தோறு நினைப்பது வுங்கப டேயிந்நத் தூலச்செய்கை
மீறு மகிர்த்திய மேயாகில் நான்முத்தி விடடையு
மாறெவ்வி தம்புக் கொளிப்பெரு மான்புணர்
வல்லவையே.

படிறே — வஞ்சகமானசொல்லே, '' வஞ்சகம்பேசேல் '' ஆத்திசூடி. கபடே — வஞ்சகமானநினைவே, தூலச்செய்கை - தூலமாகிய உடம்பின் செய்கை, அகிர்த்தியமே — தீய செயலே, வாக்கு மனம் உடம்பு ஆகிய மூன்றிலும் தீமை புரிகின்ற நான் வீடடைவது எப்படி என்றவாரும். முத்திவீடு - முத்தியாகியவிடு, ஒரு பொருட்பன்மொழி. வல்லவை — வலிமையுடையவள்,

**81.** வல்லத்தின் பாரி லிருப்பமென் ருலும் மறலியொட்டான்
அல்லவென் றங்கிருப் போமாகிற் செய்யுமயனு
மொட்டான்
ஒல்லையி லுற்பவத் தூடே யுமலவென்னுல் முடிந்த
தல்லவம் மாதெட் சணகாசியம்பதி யம்பிகையே

வல்லத்தின் — மிகுந்த, பாரில் — பூமியில், இருப்பம் — வாழ்ந்திருப்போம், மறலிஒட்டான் — யமன்விடான், அங்கு — வானுலகில், அயனும் ஒட்டான் — பிரமனும்விடான், ஒல்லையில் — ஒரு சிறுபொழுதிலும், உற்பவத்தூடு - பிறவியில், முடிந்ததல்ல — முடியாது. அம்பிகையே பிறப்பிறப்புகள் என்னுல்தாங்கமுடிந்தில்லை என்பது கருத்தாம்.

'' வஞ்சநமன்வாதனைக்கும் வன்பிறவிவேதனைக்கும்
அஞ்சியுனையடைந்தேன் ஐயாபராபரமே ''
— தாயுமானவர் பாடல்.

82. அம்பர மெங்கணும் போய்க்கரை கண்டறியாதுவங்கத்
தும்பரின் மீட்டும்வந் துற்றபுட் போலவு மோரைம்புல
வெம்பரி யோடுள்ளத் தோர்பயமின்றியே மீளவும்வந்
தெம்பெருமாட்டி யுனையடைந்தேன் சரணென்
றுன்னியே

அம்பரம் — திசைகளின், வங்கத்து உம்பரின் — கப்பலின் உச்சியில், புள்போல — பறவையாகிய காகத்தைப்போல, ஐம்புலம் — சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமென்னும், வெம்பரியோடு — கொடுமையாகிய துன்பத்துடன், கொடுமை யாகிய குதிரைகளுடன் எனினுமாம், ஓர்பயம் — சிறிது பயமும், மீளவும் — மறுபடியும், சரண் என்று உன்னி — அடைக்கலமென்று கருதி.

கடலிற்செல்லும் மரக்கலத்துச்சியிலிருந்த காகம் பல திசைகளிலும் பறந்து சென்று கரை காணுமல் மீளவும் மரக்கலத்துச்சியை ( கப்பல் ) யடைந்தது போல உன் சன்னதி யிலிருந்த நான் பலரிடமும் சென்று உய்யும் வழி காணுமல் மீளவும் சரணமென்று உன்னை வந்தடைந்தேன் என்பது இப்பாடலின் திரண்ட பொருள். உவமையணி. நீ என்னைக் காப்பாற்ற வேண்டுமென்பது கருத்து.

" வலைத்தலை மானெனவன்னி சேர்ந்துழித்
தலைத்தலையிரிந்துளோர் தம்மின் மீள்குரு
நலத்தரு கண்ணுதல் நாதற் சேர்ந்தனர்
கலத்தலையகன்றிடாக் காகம் போலவே.
— கந்தபுராணம் திருவவதாரப்படலம் 54.

83. உன்னைத் துதிக்கவு முன்புகழ் பாடவு முன்னடியார்
தன்னைப் பணியவுந் தான்விதிக் காமலித் தாரணியிற்
பொன்னைப் புடவையை நச்சிப்புல்லோர்க்கிடம்
போய்ச்சொலவோ
வென்னைப் படைத்தது நீயேவிநாசிக் கிறையவனே.

புடவி — பி. ம். பொன் — பொன்மணி முதலிய பொருள், புடவை — பொன்னுடை முதலிய ஆடைகள், நச்சி — விரும்பி, புல்லர் — உலோபர், "நீருட் கிடப்பினும் நெட்டிபோற் சிறிதும், ஈரமுமிரக்கமுமில்லாப் புல்லரை" புலவராற்றுப் படை. இதம் — இனிமையான சொல், இனிமையான பாடல்களெனினுமாம்.

84. இறைப்பொழு தேனு மவிநாசி லிங்க மிடத்தகலா
மறைப்பொருளான கருணாலயத்தை மனத்திலுன்னார்க்
கறப்பெருந் துன்ப மிடியாற் பசியினொந் தற்பர்தலைப்
புறக்கடை தோறும் பலிக்குழல் வாரிந்தப் பூதலத்தே

இறைப்பொழுது — சிறுபொழுது, மாத்திரையாகிய காலம். இடத்து — வலப்பாகமாகிய இடத்தை, உன்னார்க்கு — நினையாதவருக்கு, மிடி — வறுமை, தலைப்புறக்கடை — தலை வாயிற்படி, "தலைக்கடை வாயிற்படியினும் சென்றுவைகும், மறைசையந்தாதி - 2.

"புறங்கடை நல்லிசையும் நாட்டும்"
நீதிநெறி விளக்கம் - 2

பலிக்குழல்வார் — பிச்சைக்குத்திரிவார்கள்.

"தோத்திரஞ் செய்து தொழுதுமின் போலுநின்றேற்றமொரு
மாத்திரைப் போது மனத்தில் வையாதவர் வண்மைகுலங்
கோத்திரங் கல்வி குணங்குன்றி நாளுங்குடில் கடொறும்
பாத்திரங்கொண்டு பலிக்குழ லாநிற்பர் பாரெங்குமே.
அபிராமியந்தாதி - 67

85. பூவியை நான்முக னாழ்வினை நோக்கிப் புரிந்துவிட்ட
ஆவியை நான்கமந் தாசையைப்பற்றி
யடர்ந்தகோம்பிற்
றுவிய புன்குரங் கானே னெனையம்மை தாங்கிடினும்
பாவியென் றேதள்ளி னுமுன் சிந்தமென் பாக்கியமே.

பூஇயை — தாமரை மலரில் பொருந்தியிருக்கின்ற, ஊழ் வினை நோக்கி — எனது பழவினையைக் கருதி (அதற்கேற்ப) புரிந்துவிட்ட — உடம்போடு கட்டிவிட்ட, ஆவியை — உயிரை,

சுமந்து — உடம்பிற் சுமந்து, குரங்கானது ஒரு கொம்பிலிருந்து மற்ரெரு கொம்பிற்ருவுவதுபோல் மனமானது ஆசையால் ஒரு பொருளை விட்டு மற்ரெரு பொருள் மேற்செல்லுமியல்புடைய தாகலின் கொம்பிற்ருவிய புன்குரங்கானேன் என்ருர். ''காடுங்கரையு மனக்குரங்கு கால்விட்டோடவதன் பிறகே, யோடுந் தொழிலாற்பயனுளதோ'' தாயுமானவர் பாடல் 912, ''மந்தியுமறியாமரன்பயிலடுக்கத்து'' திருமுருகாற்றுப் படை 42, என்னைத் தாங்குதற்கும் தள்ளுதற்கும் நின் சித்தமே காரணம். ஆதலால் நீ எது செய்தாலும் அதனை என் பாக்கிய மாகவே கருதுவேன் என்பராய் ''உன் சித்தமென்பாக்கியமே'' என்ருர்.

86. பாக்கியஞ் செய்தன மேமன மேயருட் பாமதுரந்
தேக்கியருந்தவர் செய்தமிழ்ப் பாடற்றிருச்செவிக்கண்
ஆக்கியவர்க் கருளுங் கருணும்பிகை யம்மைநல்ல
வாக்கிய மாக்கிநம் புன்றமிழ்மாலை வனைந்திடவே.

மனமே! கருணும்பிகை நம்புன்றமிழ்மாலை நல்ல வாக்கிய மாக்கி வனைந்திடப் பாக்கியம் செய்தனம் எனக் கூட்டுக. அருட்பாமதுரம் — அருளால் பாடிய பாடல்களின் சுவையை, தேக்கி — நிறைத்து, அருந்தவர் செய் — முனிவர் செய்த, தமிழ்ப் பாடலை, செவிக்கண் ஆக்கியவர்களுக்கு — தன் செவியில் கேட்கும்படி படித்தவர்களுக்கு, அருளும் கருணும்பிகையம்மை, நம்புன்தமிழ்மாலை — நாம் பாடிய இழிவாகிய தமிழ்ப் பாமாலையை, நல்ல வாக்கியம் ஆக்கி — எழுவாய், செயப்படு பொருள், பயனிலைகளோடு முடிகின்ற நல்ல சொற்ருெடர் களாகச் செய்து, வாக்கியமெனினும் தொடர்மொழியெனினு மொக்கும் தருக்கசங்கிரகவுரை - 48. வனைந்திட — அழகு படுத்துவதற்கு, பாக்கியம் செய்தனம் — முன்பிறவியில் நல் வினை செய்துள்ளோம் ஆசிரியர் செய்த இழிவான தமிழ்ப் பாடலைக் கருணும்பிகை திருத்தி அழகுறச் செய்தனள் என்பது குறிப்பதிச் செய்யுள். வனைந்தனள் — அழகுறச் செய்து புனைந்தனள் எனலுமாம்.

87. வனைந்திடு மேகலை யுங்குழைத் தோடும் மணிச்சிலம்பும்
புனைந்திடுஞ் சிற்றடிப் பொற்று மரையுமெப்
போதுமுள்ளம்
நினைந்துடன் முற்றும் புளகமுற்றானந்த நீடிக்கண்ணீர்
நனைந்திட நான்றொழச் செய்வாய்தென் புக்கொளி
நாயகியே

வனைந்திடும் — அழகு செய்கின்ற, மேகலை — மேகலா பரணம் இதனை மணிமேகலை என்பர். ''மின்னுமணி மேகலைகள் மெல்லென வொலிப்ப'' விவேகசிந்தாமணி, எண்கோவையான இரத்தின வடங்களாற் செய்யப்படுவது. இடையில் அணியும் அணிகல வகைகளிலொன்று. குழைத்தோடும் — காதில் அணியும் தோடு என்னும் அணிகலன், மணிச்சிலம்பு — இரத்தினப் பருக்கைகளையுடைய சிலம்பு, காலணி, புனைந்திடும் — அழகு செய்கின்ற, சிற்றடிப் பொற்றாமரை — சிறிய பாதங்களாகிய அழகிய தாமரை மலர்கள், புளகம் உற்று மயிர் சிலிர்த்தலையடைந்து, '' தன்புளக மெய்க்களிதழைப்பவருள் தாயே '' சௌந்தரியலகரி 92. நீடி — மிகுந்து, அன்பினால் கண்ணீர் நனைந்திட என்க, தொழ — கை குவித்து வணங்க செய்வாய் என்பதாம்.

88. நாயைத் திருந்து மடவார் சிற்றின்ப நசைபிடித்த
பேயைப் பிடித்து மயலொழித் தாண்ட பெருங்கருணைத்
தாயை யுயிர்க்குத் தனித்துணை யைத்தரிப் பாகமனை
மேயப் பணிமின்கள் டீர்பர விட்டின்ப மெய்துதற்கே

நாயை — இழிந்த நாய்த்தன்மையுடையேனை, '' அளவிலாப் புன்மைக்களவு நாயினேன் இறைச்சிச் சடத்தைக் காத்திட்ட நாயினேன் '' தாயுமானவர் பாடல், நசை – ஆசை, பேயை — அலைந்து திரியும் பேய்க்குணம் உடையேனை, '' பேயாய்த் திரிந்தெய்த்தேன் '' சுந்தரர் தேவாரம்.

மயல் — உலக மயக்கம், தரிப்பு – இருப்பிடம், ஞாபகம், பரவீட்டின்பமெய்துதற்குப் பணிமின், எனக்கூட்டுக. கண்டீர் — இதனை அறிவீர்களாக, '' அவளைப் பணிமின் கண்டீரமராபதியாளுதற்கே '' அபிராமியந்தாதி - 38.

89. எய்தற்கரியதோர் மானிட தேகமெடுத்து மின்ன
முய்தற் குறுதி யுளத்தியை யேன்பின்னு முற்பவத்திற்
செய்தற் கிடஞ்செய்த னல்லாமல் வேறெவன் றீவினையே
நெய்தற் கருங்கட் டிருவவி நாசி நிருமலையே.

கடலைக் கையால் நீந்திக் கரையேறுதல் போன்ற அருமைப் பாடுடையதாகலின், ''எய்தற்கரியதோர் மானிட தேக மெடுத்தும், என்றார். ''அரிதரிது மானிடராதலரிது'' தனிப் பாடல், பெறுதற்கரிய பிறவியைப் பெற்று''
— கந்தரலங்காரம் - 67

உய்தற்கு — பிறவியிலிருந்து பிழைத்து வீடெய்துவதற்கு, உறுதி — உறுதியான நன்மை, திருவடியை வணங்கலாம், ''மானிடப் பிறவிதானும் வகுத்தது மனவாக்காயம், ஆனிடத் தைந்துமாடு மரன்பணிக்காகவன்றே'' சிவஞானசித்தியார், உற்பவத்தின் செய்தற்கு — மேலும் பிறப்பினைச் செய்வதற் கேதுவாக, தீவினையே இடஞ்செய்தனன் — தீவினைகளைச் செய்வதற்கே இடம் செய்தேன். வேறு எவன் — வேறு என்ன நன்மை செய்தேன். நெய்தல் கருங்கண் — கருங்குவளைமலர் போன்ற கண்களையுடைய, ''நெடியகட்கரிய நெய்தல்'' சௌந்தரியலகரி - 56. ''குவளைக்கண்ணி கூறன் காண்க. திருவாசகம், நிருமலை — குற்றமில்லாதவள்.

90. மலைப்பாம் நமக்கு மனத்துறையாள்மற வாவுறுதி
நிலைப்பார் மனத்தில் நிலைபெற்று வாழ்வள்தம்
நெஞ்சகத்தை
உலைப்பான் மெழுகி னுருக்கிடு வாள்கரு வுற்பவத்தைத்
தொலைப்பாள் பெருங்கரு ணாலய வானந்த சுந்தரியே.

மலைப்பாம் — திகைப்புடையவர்களாகிய, உலைப்பால் மெழுகின் — கொல்லனுலையில் வைத்த மெழுகு உருகுதல் போல, ''உலைப்படு மெழுகதென்னவுருகியே''
— கந்தபுராணம் — வள்ளியம்மை திருமணப் படலம்

கரு உற்பவத்தை — இரண்டு மாதம் பிதாவின் கருப்பத்திலும் பத்து மாதம் மாதாவின் கருப்பத்திலும் ஊறிப் பிறக்கின்ற உடம்பை, ''பத்திரு மாதங்கருவயினூறிய பாழுடம்பை'' மறைசையந்தாதி - 23.

91. தரிக்குந் தியான மனதுண்டு தாகந் தவிரமெய்த்தேன்
விரிக்குநின் சேவடிப் பங்கே ருகமுண்டு வீற்றிருப்பத்
தெரிக்கு முணர்வை யளித்துத் திரோபவந் தீர்த்
தருள்வாய்
அரிக்கு மயனுக்கு மெட்டார் வலப்பங் கமர்ந்தவளே.

தியானம் — உன்னை நினைப்பதற்கு, தரிக்கும்மனது — அதனைக் கொள்ளுவதற்குரிய மனம், உண்டு — எனக்குள்ளது, தாகம் தவிர — எனது பிறவி வெப்பம் தீர்தற்கு, மெய்த்தேன் விரிக்கும் — உண்மை ஞானமாகிய தேனை விரிக்கின்ற, சேவடிப்பங்கேருகம் — நின் செம்மையாகிய திருவடித் தாமரை மலர்கள். உண்டு — உள்ளன. இவ்வுண்மையை யறியாதபடி மறைத்துக்கொண்டிருப்பது திரோபவம். திரோபவம் — மறைப்பு, மயக்கம், வீற்றிருப்ப — உன் திருவடி நிழலில் வீற்றிருத்தற்கு, தெரிக்கும் உணர்வையளித்து — தெரிவிக்கின்ற அறிவினை எனக்குக் கொடுத்து, விளக்கின் முன் இருள் நில்லாதுபோல உண்மையறிவின் முன் திரோபவம் நில்லாதாதலின், தெரிக்கும் உணர்வையளித்துத் திரோபவம் தீர்த்தருள்வாய் என்று வேண்டினர்.

''வாழ்த்திட நாவுண்டு பாவிக்க நீயுண்டு மண்ணிலுறத்
தாழ்த்திடச் சென்னியுமுண்டு கண்டாய்தண் களவின்
மலர்
ஊழ்த்திட நீழல் உறைவார் அடியுண்டுனை நிரயம்
வீழ்த்திடு வாருமுண் டோநெஞ்ச மேயென் மெலிவதுவே.
— திருக்கருவைக்கலித்துறையந்தாதி.

92. அமரணி தானவர் திண்புயஞ் செம்புன லாறுபடச்
சமரிடு வேற்கைக் கடம்பணி வான்புயச்
சண்முகப் பேர்க்
குமரனை யீன்ற கருணா லயவல்லி கோதிலன்பர்
தமருட னென்னையுங் கூட்டிவைத்தாள் சஞ்சலமறவே

அமர் அணி — போர் செய்தலை ஆபரணமாகவுடைய, ''அருங்கலை விநோதனமராபரணன்'', நன்னூல் சிறப்புப் பாயிரம். தானவர் — அசுரர், திண்புயம் — வலிமையாகிய தோள்களிலிருந்து, செம்புனல் -- செந்நீர், இரத்தம், ஆறுபட — ஆருக ஒழுகுமாறு, சமரிடு — போர் செய்கின்ற, கடம்பு அணிவான்புயம் — கடப்ப மலர்மாலையை யணிந்த தோள்கள், ''தோளுங்கடம்புமெனக்கு முன்னே வந்து தோன்றிடினே'' கந்தரலங்காரம். ''சேயகாவி கடம்படம்பொரு செச்சை மொய்த்த புயாசலன்''

— திருப்பரங்கிரிப்பதிற்றுப்பத்தந்தாதி - 21

''சந்தத்தினங்கொண்ட தமிழ் மாலை மலர்மாலை
தனைமேவுபுயசைலனே – 20

அன்பர் தமருடன் — அடியார்களாகிய சுற்றத்தார்.

''கூட்டியவாவென்னைத் தன்னடியாரிற் கொடிய வினை
ஓட்டியவா'' அபிராமியந்தாதி - 80.

93. சஞ்சலம் போக மிடிபோக நெஞ்சகர் தன்னிலுள்ள
வஞ்சகம் போக மறம்போக மெத்த மயல்செய்புலன்
அஞ்சகம் போகப் பணிமின்கண் டீர்கரு ணாலயப்பெண்
செஞ்சிலம் பாலிக்குஞ் சேவடி யைத்தினஞ்
சென்றடுத்தே.

மிடி — வறுமை, மறம் — பாவம், புலன் அஞ்சு — ஐம் புலன்கள், அகம்போக — மனதைவிட்டுப் போகவும், ஆலிக்கும் — ஒலிக்கின்ற, அடுத்துப்பணிமின் எனக்கூட்டுக.

**94.** அடுக்குல கின்ற கருணைக் கடைக்கண் ணருளைப்
பெற்றால்
ஒடுக்கிட லாம் வினையாற்றலை யார்க்கு முயர்ந்திடலாந்
திடுக்கிட லாஞ்சிந்தை திகைத்திட லாஞ்சின்ன
பின்னஞ்செய்து
முடுக்கிட லாமெம தூதரைத் தென்றிசை முட்டவுமே.

அடுக்கு—ஒன்றன்மேலொன்ருக அடுக்கப்பட்டிருக்கின்ற, உலகு—உலகங்கள், உலகுயிர்கள். ஈன்ற கருணை—பெற்றருளிய அருட்சத்தியாகிய கருணம்பிகை, ''அகிலாண்ட கோடியீன்ற அன்னையே'' தாயுமானவர் பாடல்–940.

''சிவஞ்சத்தி தன்னையீன்றும் சத்திதான் சிவத்தையீன்றும்
உவந்திருவரும் புணர்ந்திங்குலகுயிரெல்லாமீன்றும்''
''பேசரிய வுயிரையெலாம் பெற்றுநோக்கி''
சிவஞான சித்தியார்

வினையாற்றல்—பழவினையின் வலிமை, யார்க்கும்—எல்லோரையும்விட, எமதூதரை—இயமனுடைய தூதுவர்களை. சிந்தை திடுக்கிடலாம்—அச்சத்தால் மனம் நடுங்கும்படி செய்யலாம். திகைத்திடலாம்—மயங்கும்படி செய்யலாம். இவை பிறவினைப் பொருளில் வந்தன, சின்னபின்னம்—கண்ட துண்டம், தென்திசை முட்டவும்—தென்திசை செல்லுமளவும், முழுவதிலும் ''சென்றிருக்குந்திசையளவும் சீர்த்தியுடையாரவர்கள்'' தனிப்பாடல், முடுக்கிடலாம்—துரத்தலாம் இப்பாடல்.

''சேதிக்கலாந்தர்க்க மார்க்கங்கள் யாவையும் சிந்தைசெய்து
சோதிக்க லாமுறப் போதிக்க லாஞ்சொன்ன தேதுணிந்து
சாதிக்க லாமிகப் பேதிக்க லாமுத்தி தானெய்தலாம்
ஆதிக் கலாமயில் வல்லிபொற்றுளையடைந்தவரே''

என்னும் கம்பர் பாடிய சரசுவதியந்தாதிப் பாடலின் போக்கில் அமைந்திருப்பது காண்க.

95. முட்டலில்லாது மலர்தூவிச் செங்கை முகிழ்ப்பவரைச்
சிட்டரின் மேன்மை சிறக்கவைப் பாள்செழுஞ்
செண்பகத்தின்
மட்டவிழ் புக்கொளி வல்லிதன் கோயில் வலங்
கொள்பணிக்
கிட்டமில் லாரைக்கை விட்டிடுவாளிங் கிடர்ப்படவே

முட்டல் — குறைதல், வழுவுதல், முகிழ்ப்பவரை — கூப்பித் தொழுபவர்களை, சிட்டரின் — தொண்டு செய்யும் அடியார்களினும், ஞானிகளின் எனலுமாம். செண்பகத்தின் — செண்பகப் பூக்களின், மட்டு அவிழ் — தேன் விரிகின்ற, புக்கொளி — திருப்புக்கொளியூர், வல்லி — பூங்கொடி போன்றவள்; கருணம்பிகை, வலங்கொள் பணிக்கு — வலமாகச் சுற்றி வருகின்ற தொண்டினைச் செய்வதற்கு, இட்டம் — விருப்பம்,

96. இடரும் பிணியும் மயக்கமும் நல்கி யெழுவகையாய்த்
துடரும் பவத்தில் விடாதையம் மாசெந்
துகிர்வனம்போல
அடருஞ் சடிலத் தவிநாசிமுக்க ணமலர்வெற்பிற்
படருந் திருக்கரு ணலயப் பச்சைப் பசுங்கொடியே

நல்கி — கொடுத்து, துடரும்பவம் — தொடர்கின்ற பிறப்பு, எழுவகைப் பிறப்பு — தேவர் விலங்கு மக்கள் சேண் பறவை யூர்வன, தாவரம் நீர்வாழ்த லெழுபிறப்பாம்'' உரிச்சொல் நிகண்டு, அம்மா — தாயே, ''அம்மா கருணைப் பெருந்திருவே'' கருணையந்தாதி - 100. ''கண்ணினல் நோக்கித் திருவருள் செய்து காப்பது கடனுனக்கம்மா''
— புக்கொளிமாலை - 66

விடாதை — சேரவிடாதிருப்பாய், முன்னிலையெதிர் மறை வினைமுற்று. செந்துகிர் வனம்போல் சிவப்பாகிய பவளக் காடு போல, அடரும் சடிலம் — அடர்ந்த சடை, ''பவள வன மடர்பல் சடைக்காட்டினர்'' மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் காப்பு - 4. அமலர் வெற்பில் — சிவபெருமானாகிய மலையில்,

பச்சைப் பசுங்கொடி — மிகவும் பசுமையாகிய கொடி போன்றவள், அவிநாசியப்பரை வெற்பு என்றதற்கேற்பப் பக்கத்தில் நீங்காமலிருக்கும் கருணும்பிகையைப் படரும் பசுங்கொடி என்ருர்.

" சுடரும் கலைமதி துன்றுஞ்சடைமுடிக் குன்றிலொன்றிப்
படரும் பரிமளப் பச்சைக்கொடியை "

— அபிராமியந்தாதி - 48

மலைமேற் கொடிபடருமாகலின் வெற்பிற் பசுங்கொடி என்ருர்

" தடமுலை சுமந்த மலைவல்லியை "

முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் – 4

97. கொடிபடுந் தானைப் பிரமாதி யிந்திர கோமகுட
மடிபடத்தாழு மவள்சன் னிதான மடைந்துவினை
பொடிபட நின்று புகழார்தென் காசியைப் போய்மிதியார்
செடிபடும் வாழ்வுகந் தார்சென் மந்தானென்ன சென்மங்களே.

கொடிபடும்தானை — கொடிகள் பொருந்திய சேனைகளை யுடைய, பிரமாதி — பிரமனுகிய முதல்வனும், இந்திரகோ — தேவேந்திரனுகிய அரசனும், மகுடம் அடிபட — தங்கள் கிரீடங்கள் திருவடியிற் பொருந்துமாறு, தாழும் — தாழ்ந்து வணங்குகின்ற, அவள் — கருணும்பிகை, சுட்டுப் பெயர், சந்நிதானம் அடைந்து — திருமுன்பிற் சென்று, தென்காசி — அவிநாசி "செடியேறு தீவினைகள் தீரும் வண்ணம்" திருநாவுக்கரசர் திருத்தாண்டகம் செடிபடும் – துன்பம் பொருந்திய, வாழ்வு உகந்தார் – இவ்வுலக வாழ்வை விரும்பியிருப்பராயின், சென்மம் - அவர் பிறப்பு, பயனற்ற இழிந்த பிறப்பு என்பது தோன்ற, என்ன சென்மங்களே எனப் பன்மையிற் கூறினர்.

சென்மம் பலவாகலின் பன்மையிற் கூறினரெனினுமாம்.

தென்காசி — அவிநாசி, "வாசியால் காசி விசேடபுக் கொளியில்" - 4.

"தெண்டிரைகொண்ட தெட்சணக் காசி சீருறு கருணையுன் னருளே"– புக்கொளிமாலை.

98. சென்மம் பலவதிற் றேகம் பலவந்தத் தேகத்துக்குக்
கன்மம் பலவுமுன்விசெய்த கற்பனை காண்பவர் யார்
மன்மந் தரங்கண்ட நஞ்சினுக் கஞ்சினர் மாலயனுன்
பொன்மங் கலவலி யாலயின் றுய்ந்தனன் பொன் வில்லியே

உயிர்களுக்குப் பல்வகையான பிறப்புகள் உடம்புகள் வினைகள் ஆகியவைகளை அமைத்துவிட்டது உன்னுடைய கற்பனைச்செயலேயாம். இவ்வுண்மையை யறிபவர் ஒருவரு மில்லை என்பது முதலிரண்டடிகளின் கருத்தாம். கற்பனை — ஏற்பாடு, மன்மந்தரம் — நிலைபெறுதலையுடைய மந்தரமலை. பாற்கடலில் மந்தரமலையை யிட்டுக் கடைந்தபொழுது விஷம் எழும்பியது.

"மன்னேயசைநிலை யொழியிசையாக்கங், கழிவுமிகுதி நிலைபேருகும்" என்பது நன்னூல் – 432 சூத்திர விதியாதலின் மன் நிலை பேற்றுப் பொருளில் வந்தது. மாலும் அயனும் கண்ட நஞ்சினுக் கஞ்சினர். பொன்வில்லி — சிவபெருமான், "சொன்னச் சிலம்பு குழைத்த வில்லான்" மறைசையந் தாதி - 39. அயின்று — உண்டும், உன்பொன் மங்கல வலியால் — உன் கழுத்திலணிந்துள்ள பொற்றுலியின் வலிமை யினுல், "திருமான் பொற்றுலி நாட்ட நஞ்சுண்டார்" மறைசையந்தாதி - 22.

மங்கலம் தாலியென்னும் பொருட்டாதலை, "மற்றை நல்லணிகள் காணுன் மங்கலங் காத்தவன்றே" என்னும் கம்பர் வாக்கானுமுணர்க, இராமவதாரம் – உருக்காட்டு – 36.
உய்ந்தனன் — சாகாமல் பிழைத்தான்.

"உன் பொன் மங்கலவலியால்" என்றமையின் அம்பி கையே நீ என்றும் சுமங்கலை அழிவில்லாமலிருப்பவள் எனக் கூறியவாருயிற்று.

"வேத ரஞ்சகன் மால்புரந்தரன்
வேக சண்ட குபேரனே
டாதி யெண்டிசை பாலர் பொன்றவு
மாதி யந்த மிலாத தோர்
நாதர் பொன்றில ரேதுன் மங்கல
நாணுறுந்திற மாதலா
னீதழைந்தது யோக மம்பிகை
நீலி யென்பது பாவமே"

சௌந்தரியலகரி - 26

எஞ்சினர், உயர்ந்தனன், பி. — ம்.

99. வில்லிக் கவன்கணை யாற்செயுங் காமவிரகத்தினல்
மல்லிற் பெரிதிறு மாப்புறு மூர்க்கன் மனவயிரக்
கல்லைக் குழைத்துக் கனியாக்கிக் கொண்ட கருணைமலை
வல்லிக்கு நாயடி யேன்செய்ய வேறுநன்றி மாறில்லையே

இக்குவில் அவன் — கரும்பு வில்லையுடைய அம்மன்மதன், கணையால் — ஐந்து மலர்ப்பாணங்களால் "ஆலைக் கரும்பு சிலையைங்கணைபூ" உவமான சங்கிரகம். ஐங்கணை — தாமரை மலர், மாம்பூ, அசோக மலர், முல்லை மலர், நீலோற்பல மலர். காமவிரகம் — காமப்புலவி (காமநோய்) மல் — மகளிரோடு செய்யும் மற்போர், இறுமாப்பு — மிகுந்த மகிழ்ச்சி, செருக்கு எனினுமாம். நெஞ்சம் கல்லினும் வலிதாதலின் அதனை மண வயிரக்கல் என்ருர். குழைத்து — இளகச்செய்து, கனியாக்கி — கனிபோல மென்மையுடையதாக்கி, கொண்ட கருணை — அடிமையாகக்கொண்ட அருள்வடிவானவள், "கல்லைமென் கனியாக்கும் விச்சைகொண், டென்னைநின் கழற் கன்பனுக் கினாய்" மலைவல்லி — இமயமலையரசன் புதல்வி, (கருணாம்பிகை)

"கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன் கருணை, வெள்ளத் தழுத்தி வினை கடிந்த வேதியனை" திருவாசகம் திருவம் மானை - 5. நாயடியேன் - நாய்போலும் இழிந்த தன்மையுடைய அடியேன்" நாயிற் கடையாய்க் கிடந்த வடியேற்கு"

திருவாசகம். நாய்போலும் செய் நன்றி மறவாத அடியேன் எனினுமாம். ''நாயாய்ப் பிறந்திடில் நல்வேட்டையாடி நயம் புரியும்'' பட்டினத்தார் பாடல். ''எறிந்த வேல் தைத்தாலும் வால் குழைக்கும் நாய்'' நாலடியார். கைமாறு — பிரதியுபகாரம். ''கைமாறு வேண்டாக் கடப்பாடு மாரிமாட், டென்னுற்றுங்கொல்லோவுலகு'' என்பது திருமறையாகலின், வல்லிக்கு நாயடியேன் செய்ய வேறோர் கைமாறில்லையே'' என்றார்.

**100.** மாருத மாய வுலகப்பொய் வாழ்க்கையை வாந்திசெய்த
சோருகக் கண்டுன் சரணும்புயஞ்சிரஞ் சூடிக்கண்ணீர்
ஆருய்மெய் யன்புகொண் டென்னுயிர் நின்னடி நிழலிற்கிழ்ப்
பேருக வைத்தரு ளம்மா கருணைப் பெருந்திருவே

''பொய்யான உலக வாழ்வை வெறுப்பதற்கும் திருவடிகளைச் சிரமேற் சூடுதற்கும் கண்ணீர் ஆருய்ப் பெருகத் திருவடிக்கண் அன்பு கொள்வதற்கும் திருவடி நிழலில் தங்கி நிலைபேருன பேரின்பந்துய்ப்பதற்குக் கருணாம்பிகையை அருள் செய்யுமாறு வேண்டுவதிச்செய்யுள். ''அவனருளாலே அவன்றாள் வணங்கி'' சிவபுராணம்.

சரணும்புயம் — திருவடித்தாமரை மலர், வடமொழித் தொடர் தீர்க்கசந்தி, ''அஆவிறுதிமுன் அஆவரினே, இருமையுங்கெட ஏற்குமென்ப'' முத்துவீரியம்.

மாயம் மாருத — தீமையினின்றும் நீங்காத, பொய்யுலக வாழ்க்கை — பொய்யாகிய உலக வாழ்க்கை, ''பொய்யுலக வாழ்க்கைப் புலைச்சேரிவாதனை'' தாயுமானவர் பாடல். ''உண்டு போலின்ரும் பண்பின் உலகினை யசத்தாமென்பர்'' சிவஞானசித்தியார், பொய்யாகிய உலக வாழ்வை வெறுத்தவரே மெய்யாகிய அம்பிகையின் திருவடிக்கட் செல்லும் மனமுடையவராகலின் ''வாழ்க்கையை வாந்தி செய்த சோருகக் கண்டு என்றார். ''மற்றுமென்ன பொய் வாழ்வை வாந்தி செய்த'' சோறெனவே, முற்றுமெண்ண வைப்பாய் முருகபுரியாண்டோயே'' முருகபுரி மாலை - 27.

''சகவாழ்வை யிகழ்ந்தி தயந்தனித்தவர் தந்தவக் கொழுந்து தழைத்த கொம்பே'' சௌந்தரியலகரி – 66. அற்றவர்க்கருள் செய்யுமம்மை நினற்புதப்பதம்'' ஷை 88.

அன்பின் மெய்ப்பாடு கண்களில் நீர் சொரிதலாகலின் ''கண்ணீர் ஆருய்'' என்றனர். அம்பிகையின் திருவடிகளைப் புறத்தில் சிரத்தில் வைத்து வணங்கியும் அகத்தில் அன்பு செய்தும் வாழ்பவர்கள் அம்பிகையின் திருவ்டிப்பேற்றைப் பெறுவதற்குரியவராகலின் சூடி அன்புகொண்டு என்னுயிர் நின்னடிக்கீழ்ப்பேருக என்றும் கூறினர்.

திருவடி நீழற் பேற்றை அருள்பவள் அம்பிகையே யாதலின், திருவடி நீழலின் கீழ்ப்பேருக வைத்தருளம்மா என்றனர்- கருணம்பிகையின் திருவடி நீழலிற் சேர்வதே சாயுச்சியமாகிய முத்தியாம்.

வேரிமுண்டகன் மான்மகுடங்களின்
வீசரும் ப்ரபை தீபமு வந்ததாள்
சேருநன் பெறுவாழ்வு வழங்குவை
தேட ருஞ்சிவ மர்ய மதங்கியே.

சௌந்தரியலகரி - 22

''திருவடியே வீடாம்'' என்ருர் என்று திருமுருகாற்றுப் படையுரையில் நச்சினர்க்கினியர் கூறியதும் ஈண்டு நோக்கு தற்குரியது. ''சிறுமானேந்திதன் சேவடிக் கீழ்ச்சென்று இறு மாந்திருப்பன்கொலோ'' அப்பர் தேவாரம்.

உலகுயிர்களை யீன்றவளாதலின் அம்மா என்றும், உயிர்களின் மாட்டுக்கொண்ட அருளே வடிவமாகவுடையவளாதலினல் கருணையென்றும் முத்திப்பெருஞ் செல்வத்தையுடையவளாதலின் பெருதிருவே என்றும் கூறினர்.

முதற்பாட்டின் முதற் சீரிலுள்ள திரு என்னும் சொல் இறுதிப் பாட்டின் இறுதிச் சீரில் வரப் பாடியது மண்டலித்தலாம்.

---

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3. | 26 | பேரன்புக்குரியவர்களும் — பேரன்புக்குரியவர்களான | |
| 5. | 1 | வாந்திசெய்தே — வாந்திசெய்த | |
| 34. | 5 | குழவியர் — குழலியர் | |
| 34. | 11 | தோற்கயின்ருளுக்கு—தோற்கநின்ருளுக்கு | |
| 34. | 22 | செரியுங் — சொரியுங் | |
| 42. | 28 | குழுாத்தொடு — குழாத்தொடு | |
| 46. | 7 | திருவடிகளிற்செல்ர்த — திருவடிகளிற்செல்லாத | |
| 47. | 25 | விண்ணேனு — விண்ணேறு | |
| 48. | 23 | சுருக்கம் — சருக்கம் | |
| 48. | 24 | செய்யக்கொளியில் — செய்புக்கொளியில் | |
| 55. | 4 | சாரும்தவமுடையபார் —- சாரும்தவமுடையார் | |
| 58. | 18 | வேதலிக்கும் — பேதலிக்கும் | |
| 72. | 2 | மெப்போது — மெய்ப்போது | |



வித்துவான்

## வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டரிடம்

அச்சிற் பதிப்பிக்கவிருக்கும் நூல்களிற் சில

1. தொல்காப்பியம் சொல்லதிகாரம் பழையவுரை
2. நன்னூல் பழையவுரையுடன்
3. யாப்பருங்கலக்காரிகை மூலபாடம் (சிற்றுரை)
4. இலக்கண சூடாமணி மூலமும் உரையும் (யாப்பு)
5. குவலயானந்தம் மூலமும் உரையும். மாணிக்கவாசகர்
6. பிரபந்தவியல் உரையுடன்
7. தருக்கசங்கிரகக் காண்டிகையுரை
   (தருக்கசங்கிரகச் செய்யுளும் அதற்குப்பதவுரையும் பதகிருத்திய மொழி பெயர்ப்பும்)
8. புறப்பாட்டுரை
9. மெய்மொழிச்சரிதை மூலமும் உரையும் (சிந்தியாகமம்)
10. சிவப்பிரகாசம் மதுரை ஞானப்பிரகாசருரை
11. கர்ணசிகை (வீரசைவ நூல்)
12. வெஞ்சமாக்கூடற் புராணம் மூலம்
13. வள்ளியம்மை புராணம் (காவியம்)
14. பவாநிகூடற் புராணம்
15. தந்திவனப் புராணம்
16. அர்த்தகிரி மகாத்மியம் நாககிரி மகாத்மியம்
    மொழி பெயர்ப்பு (வடமொழி தமிழ்)
17. திருச்செங்கோட்டுக் கோவை
18. திருச்செங்கோட்டுக் காதல்
19. வேதநாயகியம்மன் பதிகம் (சதகம்)
20. வதரியாற்றுப்படை (பவாநி)

21. சிவகிரிப்பிள்ளைத் தமிழ்

22. தக்கராமாயணம் (யுத்தகாண்டம் முடிய)

23. நக்கீரருலா

24. ஐயனுர் சதகம்

25. அத்தியந்தமாலை (மாணிக்கவாசகர்)

26. சூரியமாலை

27. கொங்கு வேளாளர் காணிப் பாடல்கள்

28. மதுக்கரைப் பட்டயம் (கொங்குப் புலவர்)

29. தணிகை வெண்பாவுரை (யமகம் திரிபுசிலேடை)

30. தேவிமான்மியம் விரிவுரை

31. கொங்கு நாட்டுப்பட்டையங்கள்

32. திருச்செங்கோட்டுக் குறவஞ்சி



கோயமுத்தூர் கூட்டுறவு அச்சுக்கூடம் லிமிடெட், கோயமுத்தூர்